# பிரசித்தபத்திரிகை.

| | அணா. |
|---|---|
| பாலர்சுவடி. | ௧ |
| சிறுவர்சுவடி. | ௧½ |
| ஷை அரைக்கட்டிடம். | ௨½ |
| சிறுவர்எண்சுவடி. | ௨ |
| ஷை அரைக்கட்டிடம். | ௩ |
| சிறுவர் சுவடியுஞ் சிறுவ ரெண்சுவடியும் ஒன்றாக அரைக்கட்டிடம் | ௪ |
| பரமார்த்தகுருவின்கதை. | ௧½ |
| ஷை அரைக்கட்டிடம். | ௨½ |
| கதாமஞ்சரி. அரைக்கட்டிடம். | ௪ |
| ஷை முழுக்கட்டிடம். | ௫½ |
| திருவள்ளுவர்குறட்சங்கிரகம். | ௨ |
| ஷை அரைக்கட்டிடம். | ௩ |
| சிறுவர்கல்விப்புதையல். அரைக்கட்டிடம். | ௬ |
| பஞ்சதந்திரக்கதை. அரைக்கட்டிடம். | ௫ |
| ஷை முழுக்கட்டிடம். | ௭ |
| இலக்கணச்சுருக்கம். அரைக்கட்டிடம். | ௭ |
| இலக்கணநூலாதாரம். ஷை | ௪ |
| பூமிசாஸ்திர நூலாதாரம். | ௬ |
| வாலர்கணிதம். ஷை | ௰ |

# பஞ்சதந்திரக்
# கதை.

கடவுடுணை.

# பஞ்சதந்திரக் கதை.

இஃது
சென்னைக்கல்விச்சங்கத்துத்
தமிழ்த்தலைமை புலமைநடத்திய
தாண்டவராய
முதலியாரவர்கள்
பதிப்பித்தபிரதி
முதலியவற்றைச்
சிலவித்துவான்கள்
ஆராய்ந்துசீர்திருத்தினபடி
பெரியோருத்தாரத்தின்
பேரில்



௲௮௱௫௰௯
புதுவையிற் கல்விசாலை யச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

# பாயிரம்.



பிரியமுள்ள நல்லுணர்ச்சிப் பொருட்களைக் கொண்டு சிறுவர்களைப் படிப்பித்தலே நியாயம். ஏனெனிற் கற்கிற பொருளின்மேல் விருப்பமிருக்கிற் படிப்பதிகசீக்கிர மேறு மென்பதற் கையமில்லை. ஆதலாற் பிள்ளைகளுக்குப் பிரியப்படத்தக்க பலகதைகள் கூடிய பஞ்சதந்திரக்கதையைப் பள்ளிக்கூடங்களிலே மேன்மேலும் வழங்குவிக்கக் கருதினோம்.

ஆயினும் அந்நூலைப் பரிசோதித்துப் பார்க்கிறபோது வெளிப்பட்ட அதின் நானாவித பிரதிகளில் பல பிழைகளோடே அநேகந் துர்ப்போதனைகளுங் கலந்து வழங்குகிறதை விசனத்தோடே கண்டோம். அவைக ளென்னவெனில் தான் நினைக்குங் கருமங்களை நிறைவேற்றவுந் தன் சத்துராதிகளை யழித்து நிர்மூலமாக்கவும் பொய், சூது, வஞ்சனை, கள்ளஞானம், கள்ளப்பத்திரம், கொலை முதலிய தகாத வுபாயதந்திரங்களேயாம். அதற் குதாரணமேதெனில் இஃது தவிர மற்றப்பிரதிகளில் மித்திரபேத தந்திரக்கதையின் கடைசியிலே தமனகன் சொல்லுகிறதாவது: "சத்துருவைக் கொல்லவேணுமென்

று சாஸ்திர மிருக்கிறது. தாயானாலும் பந்து வானாலும் புத்திரனானாலு மித்திர னானாலு மிவர் களில் யார் தன்னைக் கொல்லப் பிரவர்த்திக்கிறு ஞே வவனை ராசா கொல்லவேண்டும். ஏனென் ருல் தயையுள்ள ராசனும் எல்லாம் பக்ஷிக்கி ற பிராமணனுஞ் சுதந்தரமாயிருக்கிற பெண் சாதியுந் துஷ்டசிநேகிதனும் விபரீத சேவகனு ம் அசாக்கிரதையான மந்திரியும் நன்றியறியா தவனு மிருக்கலாகாது. மேலும் மெய், பொய், கடுமை, மென்மை, கொலை, தயை, உதாரத்துவ ம், உலோபத்துவம், பலவழியாகத்திரவியஞ்சம் பாதித்தல், வெகுபெயருடைய சிநேகித மிப்படி ப்பட்ட பலகுணங்கள் வேசியைப்போ லிராசா வுக் கிருக்கவேண்டுமென்று ராசநீதியி லிருக்கி ன்றன,, என்பதாம்.

அப்படிப்பட்ட துர்நடத்தைக ளிராசாவுக் கு நீதி நியாயமாகில், கொஞ்சத்துக்குள்ளே பி ரபுக்களுந் துரைகளும் பிரசைகளு மப்படிக் கொத்த கெட்டபோதனைகளையுந் துர்மாதிரி கைகளையு மநுசரிப்பார்கள். அதனு லுலோக மெல்லாங் கெட்டுப்போகிறதற் கிடமாமே. அந் தத்துர்ப்போதகங்களை யநுசரித்ததினு லநேக ர் குணங்கெட்டுச் சூது, களவு, வஞ்சனை, அநியா யம், கொலைமுதலிய பாதகங்களைச் செய்து நீ திக் கர்த்தாக்களின் கையிலகப்பட்டுத் தீராததுன்பத்துக் குள்ளானூர்க ளென்கிறதற்குச் சந் தேகமில்லை.

ஆதலாலியன்றமட்டு மவைகளைத் திருத்தவேண்டியதாயிற்று. கதையின்தொடர்ச்சியைப் பற்றியவைகள் திருத்தமாகக் கூடாதவிடத்தில் அவைகளின்மட்டி லெச்சரிக்கை யுண்டாகும் பொருட்டுச் சிலவிவரங்களைக் கூட்டினோம். பலவிடத்தில் அந்தத் துர்ப்போதனைகள் வஞ்சனையாய்ச் சொல்லப் படுகிறபோதும் அவைகளாற் றுன்பமுதலிய வாக்கினை விளைகிறபோதும் அவைகளி லடங்கிய கள்ளத்தனமும் அசத்தியமுந் தின்மையுந் தானாய் விளங்குகின்றன. ஆதலால் அவ்விடங்களி லவைகளைத் திருத்தவுங் குறிப்புகளை வைக்கவு மவசரமாயிருக்கவில்லை. வாத்திமார்களிதெல்லாம் பிள்ளைகளுக்கு விவரமாய்க் காட்டித் தெளிவிக்கவேணும்.

மீளவு மிக்கதைகளைக் குறித்துப் பொதுப்படச் சொல்லத்தகுஞ் சிலபுத்திமதிகளாவன: புத்திக் கூர்மையைத் தூண்டிக் கிளப்புதற்கான இக்கதைகளில் வஞ்சகர் தகாதவுபாய தந்திரங்களைக் கொண்டு தங்க ளெதிராளிகளை யேய்த்து நிர்மூல மாக்குகிற வகையைப்பார்க்கிறபோது அவர்களுடைய வஞ்சனை தந்திரங்களை யறிந்து அவைகளின் மட்டி லெச்சரிக்கையாயிருப்பதினு லவைகளுக்குத் தப்பித்துக் கொள்ளும்வகையைக் கற்றுக்கொள்ள வேண்டிய தொழியத் தானு மப்படிப்பட்ட தின்மைகளைச் செய்யப் பரிச்சேதந் துணியலாகாது.

இராசாக்கள் அல்லது சனங்கள் நீதி நியாயமுள்ள சண்டைசெய்கிறபோது தங்கள் சத்துருக்களை வெல்லுதற்குச் சில வுபாயதந்திரங்கள் வழங்கலாமென்று எவரு மொத்துக்கொண்டாலும் அவைகள் பொதுப்பட மனிதர்களுக்குள்ளே வழங்கலாமென்றுபரிச்சேதநினைக்கலாகாது. மேலும்பொய், சூது, கபடு, வஞ்சனை, கள்ளஞானம், கள்ளப்பத்திரம், திருட்டு, கொலை முதலியதுகள் இவ்வுலகத்திலு மறுலோகத்திலு மாக்கினைக்குரிய பாவங்களாயிருக்கின்றமையால் அவைகளையாவரும் விலகிக் கபடற நடந்து அந்தப் பாவங்களுக்கு எதிரானசுகிர்த சற்குணங்களை யநுசரிக்கவேணும்.

ஆதலா லிக்கதைகளில் நுழைந்திருந்த துர்ப்போதனைகளையு மற்றச்சில பிழைகளையுந் திருத்த அநேகம்பிரதிகளைப் பரிசோதித்துப் பார்த்து இந்நூலைச்சுத்தப்பிரதியாக்கியாவர்க்குமுபயோகமாகத் தருகின்றேம். இக்கதைகள் சிறுவர்படிப்புக்கு மிப்போது சொன்னவைக ளவர்களுடைய நல்லொழுக்கத்துக்கு முதவுமென்று நம்பிக்கொண் டிருக்கின்றேம்.

இந்நூலி லடங்கிய கதைகள் வெறுங்கட்டுகதைகளென்று புத்திசாலிகள் தாங்களே கண்டுபிடிப்பார்கள். இவைகளில் நாடக மாடுகிறப்போலக் காட்டியிருக்கிற மிருகங்களுக்கு இயல்

பாயிராதபுத்தியும்பேச்சும் அப்பிராணிகளுக்கு இரவலாகச்சாத்தியிருக்கின்றது. சிலசமயத்தில் அவைகள் கபடத்தினாலுஞ் சிலவேளை தங்களுக்குரிய புத்திக்குறையினாலுஞ் சிலவிசை இத்தேசத்தில்வழங்கிய அஞ்ஞான எண்ணங்களினாலுஞ் சொல்லிய சில்லறைத்தப்பறைகளை நாங்குறிக்காதிருந்தாலும் அவைகள் தப்பறைகளென்று எளிதிற் கண்டுபிடிக்கலா மென்பதைப்பற்றி அப்படியிருக்க விட்டோம்.

அருள்வேதத்தை யறியாதவர்கள் இக்கதைகளை யுண்டாக்கினதினால்உத்தமபுண்ணியங்களைப் படிப்பியாமல் விட்டார்கள். ஆதலால் நன்மையாற் றின்மையை வெல்லக் கற்றுக்கொடாமல் தின்மைசெய்யும் பகையாளிகளுக்குப் பிரதிதின்மை செய்யப் படிப்பித்தார்கள். தீயோர் ஒருபோதுந் திருந்தமாட்டார்க ளென்றும் ஆதலால் அவர்களுக்கும் மூடர்களுக்கும் உபதேசஞ் சொல்லலாகாதென்றும் நினைத்திருக்கிறார்கள். தேவாநுக்கிரகத்தின் வல்லமையை யறியாதவர்களிடத்தி லதெல்லா மதிசயமல்ல. ஆயினும் பூதங்கள்முதலிய பேய்களால் மனுஷர்களுக்கு வரத்தக்க துன்பங்கள் அந்தக் கட்டுக்கதைகளிற் காட்டப்பட் டிருக்கிறதினால் அவைகளை விலகக் கருதுகிறவர்கள் சத்தியவேதநெறியைத் தேடிக்கொள்ளுகிறதுக்குநல்லபுத்தி வருதற்கிடமாம்.

இதிலே கற்போர் செந்தமி ழருமைக்கும் புள்ளிக்குத்தாத நூற்களின் வாசிப்புக்கு அப்பியாசித்துக் கொள்ளும்பொருட்டு முதலிரண்டு கதைகளிலே புள்ளிகுத்தி மற்றவைகளிற் குத்தாமல்விட்டுக் கடைசிக்கதையைச் செந்தமிழினடைப்பிரகாரமா யச்சிற்பதிப்பித்தோ மென்றறிக.





# பஞ்சதந்திரக்கதை.

## வரலாறு.



கல்விப்பொருளிலுஞ் செல்வப்பொருளிலுங் குறையில்லாதவர்களுக் குறைவிடமா யிருக்கிற பாடலிபுரமென்னு மொருபட்டணமுண்டு. அந்தப் பட்டணத்திற் சகல சுகுணங்களோடுங் கூடியிருக்கிற சுதரிசனனென்னும்-ராசனொருவனிருந்தான். அந்தராசா தன்பிள்ளைகள் படியாமல் மூடர்களா யிருக்கிறதைக்கண்டு வெகுசலிப்போடும் விசனத்தோடு மாலோசிக்கத் தொடங்கினான். எப்படியென்றால் - கல்வியுந் தர்மகுணமு மில்லாத பிள்ளைக ளிருந்தாவதென்ன? பால் கொடாத வெருமைகளைக் காப்பாற்றிப் பலனுண்டா? வேதசாஸ்திர மறிந்தவனா யொரோபிள்ளை யிருந்தா லவனாலே குடும்பமெல்லாஞ் சுகமடையும், இப்படிக் கில்லாதபிள்ளைகள் கர்ப்பத்திலே யழிந்தாலும்-அழியாவிட்டாற்பிறந்தவுடனே யிறந்தாலு மிறவாவிட்டாற் பெண்ணாகவாலு மில்லாவிட்டாற் பெண்சாதி மலடியாகவாலும் போகிறது நல்லது. குலத்தி லயோக்கியமான பிள்ளையிருக்கலாகாது. சன்மார்க்க புண்

ண்ணியத்தினாலே யிம்மை மறுமைக்குச் சுகங்கொ டுக்கிற புத்திர னுண்டாகிறான். பாபத்தினாற் குலத்தைக்கெடுக்கிற புத்திரனுண்டாகிறான். மேலும்-இந்தப்பிள்ளையைப் பெற்றவர்களென்னதவஞ் செய்தவர்களோ வென்று கண்டோர் சொல்லும்படி நடக்கிறவ னல்லோ பிள்ளையென்று தனக்குள்ளே யாலோசித்துப் பெருமூச்சு விட்டுப் பின்பு சபையைப்பார்த்துப் பருவமும்-செல்வமும்-ராசசமும்- அறிவில்லாமையுமாகியவிந்த நான்கினு ளொன்றென்றுதானே கேட்டுக்கெல்லா மிகுந்த துணையாயிருக்கு மிந்த நான்கு மொருவனிடத்தி லிருந்தா லவ னென்னபாடுபடான்? ஆகையால்-பிள்ளை யெண்ணிக்கைக்குப் பிறந்து துர்மார்க்கர்களா யிருக்கிற வென்பிள்ளைகளை நீதிசாஸ்திரோபதேசத்தினாலெந்த மகாபுருஷன் மறுசனனம் வரப்பண்ணுவானென - அப்போது சகல நீதிசாஸ்திரங்களிலும் வல்லவனாகிய சோமசன்மா வென்பவனெழுந் திவர்களுக்குச் சமானமான வறிவையுடையவர்க ளிவ்வுலகத்தி லில்லையென்று சொல்லும்படி யிதோ நானாறு மாசத்திற்செய்யமாட்டுவேன், அதுவரைக்குநீர் தாளையெண்ணிக்கொண் டிருமென்று சபதம்பண்ணினான். அதைக்கேட்டு நடுக்கடலிற் றிகைதப்பி மயங்கு மாலுமிக்கோர் துறை தோற்றினாற்போல ராசாமிகவு மனமகிழ்ந் தவனுக்குபசார

ஞ் செய்து தன்னுடைய பிள்ளைகளை யவன்வசத்
திலொப்பித்தான். சோமசன்மா வுடனே யந்த
ப்பிள்ளைகளைத் தன்வீட்டுக் கழைத்துக்கொண்டு
போய்க் கருப்பஞ்சாற்றைக்காய்ச்சி யொருசர்க்
கரைக் கட்டியாகத் திரட்டினாற்போல நீதிசாஸ்
திரங்களைப் பஞ்சதந்திரக் கதையாகக் கற்பித்து
ராசகுமாரர்களுக்குச் சொல்லத் தொடங்கினா
ன். எப்படியென்றால்- சோமசன்மா-ஓ ராசகு
மாரர்களே யுங்களுக்கு வேடிக்கையாகச் சிலக
தைகள் சொல்லுகிறேன், கேளுங்களென்றுசொ
ல்ல-அதென்னகதை யென்றார்கள். பஞ்சதந்திர
க்கதையென்று சொன்னான். பஞ்சதந்திரமென்
பதென்ன? தெரியச்சொல்லவேண்டுமென்றார்க
ள். அவை: மித்திரபேதம், சுகிர்ல்லாபம், சந்தி
விக்கிரகம், அர்த்தநாசம்-அல்லது லப்த்த ஆ
ணி, அசம்பிரேக்ஷியகாரித்துவம்- என-ஐந்து த
ந்திரங்களுண்டு. அவைகளுள்- மித்திரபேதமாவ
து சிநேகத்தைக்கெடுத்துப் பகையுண்டாக்கல்,
சுகிர்ல்லாபமாவது தங்களுக்குச் சமானமானவ
ர்களோடு கூடிப் பகையில்லாமல் வாழ்ந்திருக்கு
தல், சந்திவிக்கிரகமாவது பகைவரையடுத் து
றவுசெய்து வெல்லுதல், அர்த்தநாசமாவது த
ன்கையிற்கிடைத்த பொருளையழித்தல், அசம்பி
ரேக்ஷியகாரித்துவமாவது- யாதொரு காரியத்
தையுந் தேறவிசாரியாமற்செய்தல்-என்றுசொ

ன்னுன். ராசகுமாரர்கள்—ஐயா—அந்தக்கதைகளை யெங்களுக்கு விளங்கச் சொல்லவேண்டுமென்ருர்கள். சோமசன்மா உங்களுக்கு மங்களமுண்டாகவென் ருசீர்வதித்துச் சொல்லத் தொடங்கினுன்.





# முதலாவது.

## மித்திரபேததந்திரம்.

ஒருகாட்டிலொருசிங்கமுமெருதுங்கூடி மிகவு மொருமையாக வாழ்ந்திருந்தன. அந்தச்சிநேக த்தைக் கோட்சொல்லலும் லோபகுணமுமுள்ள வொருநரிவந்து கெடுத்ததென்றுசொல்ல - ராசகுமாரர்களதெப்படியெனச்சோமசன்மாசொல்லத்தொடங்கினன்.

தென்னாட்டிலே மகிழாரூப்பியமென்னும் பட்டணத்தில் வர்த்தமானனென்றொரு வர்த்தகனிருந்தான். அவனுக்கு வெகுபணமிருந்தும் -இன்னுஞ் சம்பாதிக்கவேண்டுமென்கிற வாசையினலாலோசிக்கலானன். எப்படியென்றல் யாதொன்றுசம்பாதிப்ப தருமையோ வதைச்சம்பாதிக்க வேண்டும், சம்பாதித்ததைக் காப்பாற்றவேண்டும், காப்பாற்றினதைவிர்த்திபண்ணவேண்டும், விர்த்திபண்ணினதைத் தானுமனுபவித்து-உத்தமபாத்திரத்திற் செலவழிக்கவேண்டும். ஏனென்றல்-காப்பாற்றுதிரவியம் - நாசமாகும், விர்த்திபண்ணுதது குறையும், தானுமநுபவித்துச் சத்பாத்திரத்திற் செலவழிக்காதது வீணுகுமெனச் சாஸ்திரமிருக்கிறதினலும், மேலும்-இன்பமும் - புண்ணியமும்-கீர்த்தியும் - மனிதர்க்குள்ளே பெருமையும் - உறவும்-நினைத்தது முடித்தலும் யாருக்குண்டு - திரளாகப்பணங் குவித்தவர்களுக்கேயுண்டு-இல்லாதவர்களுலகத்திலே நடைப்

பிணமாவார்க ளாகையினாலு மேன்மேலுஞ் சம்பாதிப்பதே யோக்கியமென் றுலோசித்துக்கொண்டு தன்னிடத்திலிருக்கிற சரக்குகளை வண்டியிலேற்றி-அதிற் சஞ்சீவகன் - நந்தகனென்னும் பெயரையுடைய விரண்டெருதுகளைப்பூட்டி நடத்திக்கொண்டு தேசாந்தரம்போனான். போகும்போ தொருநாள்-நெருங்கியகாட்டிலே மிகுந்த பாரந்திறைற்சஞ்சீவகனென்கின்ற வெருது காலிடறிவிழுந்து நொண்டியாச்சுது. அப்போது வர்த்தமானன்-அந்தவெருதுக்குப்பதிலாக வேறொருதை வண்டியிற்கட்டி யோட்டிக்கொண்டு - அவ்வெருதுக் கோராளைக்காவல்வைத்துப் போனான். பிற கந்தச் சேவகன் வர்த்தகனிடத்துக் கிரண்டொருநாள் கழித்துப்போ யந்தவெருது செத்துப்போச்சென்று புளுகினான். இங்கே யெருதோவென்றால் - ஆயுசுபலத்தினாற் பிழைத்துப் புல்லுமுதலாகிய மேய்ச்சலாலே மிகவும்பெருத்துக்கொழுத்து - ஒடிந்தகாலுங்கூடி யந்தக் காட்டிலே யெதேச்சையாகத் திரிந்துகொண்டிருந்தது. அப்படியிருக்கையில் ராச்சியபட்டாபிஷேக சடங்குகளில்லாமல் - காட்டிற்சஞ்சரிக்கிற பிராணிகளுக்கெல்லாந் தன்வல்லமையினா லிராசத்துவத்தை யடைந்திருக்கிற சிங்கமானது தன்பராக்கிரமத்தாற் சம்பாதிக்கப்பட்ட ராச்சியத்தைச் சுகமாக வநுபவித்துக்கொண் டிருக்கையி லொருநாள்-தாகமெடுத்துத் தண்ணீர்குடிக்க யமுனை யாற்றங்கரைக்குப் போம்போது-அங்கே சடிதியி லென்றைக்குங் கேட்டறியாத பேரிடி முழக்கம்போலும்- அந்தரிஷப முக்காரம்போட்ட தொனியைக்கேட்டுத் திடுக்கிட் டிதேது புதிதாயிருக்கிறதென்று பயந்து நடுநடுங்கி

த் தண்ணீர்குடியாமற் சும்மாவசைவற நின்று விட்டது. அப்போ தவ்விடத்திலிருந்த சிங்கத்தி னுடைய பிரதானமந்திரி குமாரர்களாகிய கரட கன்-தமனகனென்கிற நரிகளிரண்டு மிந்த வதி சயத்தையறிந் தொன்றுக்கொன்று பேசத்தொ டங்கின. எப்படியென்றால், தமனகன் கரடகனை ப்பார்த்து நம்முடையராசா தண்ணீர்க்குப்போ ய்க்குடியாம லேன்சும்மா நிற்கிறானெனக் கரடக ன்-அதைவிசாரிக்கிறதினா னமக்காவதென்ன? இ ரையகப்படுமா? பெருமையுண்டாகுமா? கிணற் றுத்தவளைக்கு நாட்டுவளப்பமேன்? சும்மாவிரு. ஏனென்றால்-தனக்குத் தகாதகாரியத்தைச் செ ய்கிறவன் கடாவிய வாப்பைப் பிடுங்கின குரங் குபட்டபாடு படுவானென்றுசொல்ல - அதென் னவென்று கரடகன் கேட்கத் தமனகன் சொ ல்லுகிறது.

மகததேசத்தி லிருக்கின்ற சுதத்தனென்போ னொருவன் கோயிற் றிருப்பணிக்காகக் கொண்டு வந்தறுக்கவிட்ட மரங்களில் வாட்காரன் பிளக் கும்படி முளைகளடித்துவிட்டுப்போன வொருமர த்தின்மே லந்தக்கோயி னந்தனவனத்திலிருக் கின்ற குரங்குகளி லொன்றுவந் துட்கார்ந்தது. அப்போது - அம்மரப்பிளப்பிற் றன்பீச மிறங்கி யிருப்பதை யறியாம லடித்தமுளையை யசைத்து ப்பிடுங்கினவுடனே பிளப்புநெருங்கிப்பீசநசுங்கி யிறந்தது. ஆதலால்-தனக்குத் தகாதகாரியத் தைச்செய்தால்-யார்க்கும் பிராணச்சேதம் வரு மென்றுசொல்லி நேற்றுநாந் தின்றுமிகுந்திரு க்கிற விரையைத்தின்று சுகமேயிருப்போம், வா வென்று கரடகனழைத்தபின்பு தமனகன் கரட கனைப்பார்த்துச்சுவாமிகாரியஞ்செய்யாம லிரை

தேடுகிறதையே பெரிதாகநினைக்கலாமா? ஒருவன் மித்திரர்களுக்குபகாரமுஞ் சத்துருக்களுக்கபகாரமும் பண்ணுவது-உலகவழக்கம். அதற்கிராசசேவையேதக்கது. மேலும் ராசாவை யடுத்திருக்கையில் வெகுசனங்களுக்கு நன்மைசெய்வதே ராசசேவைக்குப் பிரயோசனமாம். இல்லாவிட்டாற் காக்கையுங் காகபலியையு மெச்சிலையு மலத்தையுந்தின் றுயிரம்வருஷம் பிழைத்திருக்கிறது. நாயும் பசையில்லாத வெள்ளெலும்பைக்கௌவிக்கடித்துக்கடித்துப் பல்லசைந்தும் பசிதீராமற் சந்தோஷித்தையடைகிறது. மேலுமெசமானன் கையிலிருக்கிற வொருகவள மெச்சிலைப்பார்த்துக் காலில்விழுந்து வயிற்றையெக்கிக்கொண்டு-எளியமுகத்தைக்காட்டி முகத்தைப்பார்த்து வாலைக்குழைத்துக் கெஞ்சிக் காத்துக்கிடந்து கொஞ்சமெச்சிலை வாங்கித்தின்னும். யானையோ பாகனைப்பாராமலு மடிக்காமலு மவன்வேண்டிவேண்டி வலியக்கொடுக்கக் கர்வத்தோடுவாங்கி நாயைக்காட்டிலு மாயிரம்பங்கதிகஞ்சாப்பிடும். சிங்கம்பசியினாற் சங்கடப்படும்போது நரிசமீபத்திலிருந்தாலு மதையசட்டைபண்ணி யானையையேகொல்லும். ஆதலாலுலகத்தில் யார்புகழோடுசீவிக்கிறார்களோ அவர்களேபாக்கியவான்கள். சிறுகுழிகள் கொஞ்சந்தண்ணீரா னிறையும், எலியின் சேரங்கை சில தானியத்தா னிரம்பும், அப்படி போல மூடன்-இதாகிதந்தெரியாமற் கொஞ்சத்திலேசீவனம்பண்ணுவான். ஆனாலவனுக்கும் பசுவுக்குமென்னபேதம்? ஆகையால் ராசகாரியம் பார்த்துப் பெருமையுடனே சீவிக்கிறதே நல்லதென் றிப்படிச்சொல்லக்கேட்டுக் கரடகன்-தமனகனைப்பார்த்துச் சொல்லுகிறது: நல்லது, இ

ந்தயோசனைகளுக்கு மிந்தப்பேச்சுகளுக்கு மிப்போது நாம்ராசகாரியத்திலிருக்கவில்லை, இரைதேடுகிறகாரியத்தி லிருக்கிறோம். ஆதலால் – நீயேன் வீணனமனோராச்சியம்பண்ணுகிறாய்? மூடவன் கொம்புத்தேனுக் காசைப்பட்டாற் கிட்டுமாவென் றிகழ்ந்துசொல்லத் தமனகன் சொல்லுகிறது: நல்லதிருக்கட்டும், பிரதானியுங்காலத்தினு லப்பிரதானியாகிறான். தன் முயற்சியாலுங் குணத்தினுலும் லகுவானவனுஞ் சமர்த்தனுகிறான். அல்லாமலும்–யாருமேலானகாரியத்தையே ஆலோசிக்கவேண்டும். அது கைகூடாவிட்டாலும்பெருமைவரும். புத்திசாலிகளருமையானகாரியங்களைச்செய்வார்கள். புத்தியீனர்கள்–எளிமையான காரியங்களைச் செய்வார்கள். மலையுச்சியிலொரு பெருங்கல்லை யேற்றுதலரிது, அங்கிருந்ததைத் தள்ளுதலெளிது. ஏரியினீரைக் கட்டுதலரிது, உடைத்தலெளிது. ஆகையால் – பெருமையுஞ்சிறுமையு மவரவராலேயேவரும். முயற்சியுடையா ரிகழ்ச்சி யடையாரென்னும் பழமொழியாகுலுங் கேட்டிலையாவென் றிப்படிச்சொல்லத் தமனகனைக்கரடகன்பார்த்து நல்லது நீபோய்ச் சிங்கத்தினிடத்தி லெதைக்குறித்துப் பேசுவாயெனத் தமனகன்–நம்முடையசுவாமி மூடத்தனத்தாற் பயந்திருக்கிறான், அதை நீயெப்படியறிந்தாயென்று கேட்கிறையோ? சொன்னபொருளைப் பக்ஷிமிருகங்களு மறிந்துகொள்ளும், சொல்லாமலறிகிறவனே பண்டிதனப்படியறியாவிட்டாற்புத்தியாற்பிரயோசனமென்ன? ஆகையாலுனிங்கேயிருந்தபடியே யறிந்தேன். இப்போது நானிதைமுன்னிட்டுக்கொண்டுபோய்ச் சிங்கத்தைச் சிநேகம்பண்ணிக்கொள்ளுகிறேனெனத்

தமனகனைப்பார்த்துக் கரடகன்சொல்லுகிறது: நம்முடைய ராசர்கள்-மோந்துகொள்வதுபோற் கடிக்கிறவர்கள், அரசரும்-நெருப்பும்-பாம்புஞ்சரி, ஆதலாற்பழக்கமில்லாமலிருக்கையி லவனை யெப்படிச் சிநேகம்பண்ணிக்கொள்வாயென-அப்போது தமனகன்-நான்பேசுவதிற் சதுரனென்றறியாயா? சமர்த்தனுக்கெதுபெரிது? பறக்கிறபறவைகளுக் கெது தூரம்? வித்துவானுக்கெது பரதேசம்? பிரியமாகப் பேசுகிறவர்களுக்கெவன்சத்துருவெனக் கரடக னப்படியானாலும் ராசாக்களிடத்தில் - அகாலத்திற்போனா லவமானநேரிடுமென்றது. அதற்குத்தமனகன்-அவமானம்வந்தாலும், எசமானன் சமீபத்திலேயேயிருக்கவேண்டும். ஏனென்றால் யார்சமீபத்திலிருக்கிறாரோ-அவனுடனே ராசாக்கள் காரியங்களைச்சொல்லுகிறார்கள். கொடிகள் கிட்டவிருக்கிறமரத்திலேயேபடரும். அரசர்களும் ஸ்திரீகளும்-தங்களைக்காத் திங்கிதம்பேசுகிறவர்களிடத்தின் மனதிரங்குவார்களெனக் கரடகன்-நல்லது நீயவனிடத்தி லெப்படிப் பேசுவாயென்றது. தமனகன்-நல்ல மழைபெய்திருக்கையி லெப்படி விளையினின்று முளைகள்புறப்படுமோ - அப்படி ராசாவின்கேள்விக்கேற்க வென்வாக்கினின்று முத்தரவுபுறப்படும், ஆயினுமொருவேளைப் பிரகஸ்பதியும் பேச்சிற்றவறுவானானால் - மற்றவர்களுக்குக் கேட்பானேன்? ஆயினுங் காலமறிந்துபேசினால் யாதோ ரவமானமும்வராது. ராசாதன்காரியம் யாராலேயாகிறதோ - அவனிடத்தி லொருவேளைச்சிறிதுகுற்றநேரிட்டாலுமதைப்பாராட்டாமலவனைப்பரிபாலித்து விர்த்தியடையப் பண்ணவேண்டுமெனக் கரடகன்-அரசர்கள்-மலைபோல

னுசரிக்கிறதற்குக் கடினமாயிருக்கிறார்களெனத் தமனகன் - ஆயினும் - அவர்கள்சுபாவமறிந்து பேசித் தனக்கிதம்பண்ணிக்கொள்ளவேண்டுமென்று கரடகனிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு சிங்கத்தினிடத்திற்குப் போய்த் தூரத்திலே நின்று தண்டம்பண்ணி ராசாவினுத்தரவினாலுட்கார்ந்தவுடனே சிங்கம்-நெடுநாளா யுன்னைக் காணேனெனத் தமனகன் - இப்போதுதேவரீரிடத்திற்கு வரத்தக்ககாரிய நேரிட்டதனாற் றங்களுடைய திருவடியண்டை வரலானேன். இல்லாவிட்டால் வந்ததற்குப்பிரயோசனமென்ன? ராசாக்களுக்கொருவராலும் பலனில்லாவிட்டாலுமொருவேளை-சிறு துரும்பும் பல்லுக்குத்தவுதவுமற்றவைகளுக்குக் கேட்பானேன்? மேலும்-ஒருவேளை-அரசர்கள் குணவானை யசட்டைபண்ணித் தள்ளிவிட்டாலு மவன்சற்குணம்போய்விடுமா? நெருப்பைத் தலைகீழாகப்பிடித்தாலு மதன் சுவாலை கீழாகுமா? ஆதலாலரசர்கள் பரிசோதித் தறிந்தியோக்கியனை நல்காரியத்தில்வைத்தா லவன் ராசாவுக்குக் கீர்த்தியைப் பெருகப்பண்ணுவானாகையா லென்னைத்தாங்கள் சிறுநரியென் றவமானம்பண்ணலாகாது. விஷ்ணு வெடுத்திருக்கிறவராகவடிவை யுலகத்திற் பூசிக்கவில்லையா? ரூபத்தைப்பாராமற் குணத்தைப்பார்க்கவேண்டும். ஏனென்றால்-மலைபோலிருக்கிறதேர் சிறுசுள்ளாணியா னிலைபெறும். நானோ சுவாமிகாரியத்திற்பற்றுள்ளவன், கருவியுங்காலமுமறிந்து கருமமுடிக்குமாற்றலுள்ளவன், இந்தவல்லமையெல்லாமுமதுசார்பிருந்தாற் பிரகாசிக்கும். ஏனென்றால் வாண்முதலிய வாயுதங்களும் வீணை முதலிய வாத்தியங்களும் பூமியும் ஸ்திரீகளும்-யோக்கிய

ர்களுஞ் சாஸ்திரங்களுமாகிய விவையெல்லாம்ப ரிபாலனம் பண்ணுகிறவர்களாற் பிரகாசிக்கும். அண்டையிற் சமர்த்தனில்லாதராசாவுக் கபகீர்த்திவருமென் றிப்படிச்சொல்லக்கேட்டுச் சிங்கந் தமனகா நீயென்பிரதானி புத்திரனல்லவாவென த் தமனகன் சுவாமியென் றுவணங்கிச் சும்மாவிருந்தது. சிங்க மேதாவதுசொல்லவேண்டிவ திருந்தாற் சொல்லெனத் தமனகன் தேவரீர் தண்ணீர்க்குவந்து குடியாமன் மெய்மறந்து சும்மா திற்கிற்போனச் சிங்கமெய்தாஞனிந்தக்காட்டில்வெகுநாள் சுகமாகவிருந்தே னிப்போதிதைவிட் டிவிடத்தக்கதாகச்சம்பவித்திருக்கிறது. ஏனென்பாயாகில்–என்றைக்குங்கேளாத மேகமுழக்கம்போ லொருதொனி யின்றைக்குக்கேட்டேனந்தமுழக்கம்போலவே யிருக்குமல்லவோ அந்தப் பிராணியு மாதலா லிதைக்குறித்தென்னசொல்லுகிறையோ வதுவேயெனக்குப் பிரமாண மிப்போது நீவழுக்கிவிழுகையி லூன்றுகோல்போற் கிடைத்தாயேயெனத் தமனகன் சுவாமிதொனியினாலேயே பயப்படலாகாது. ஏனென்றால்–முன்னொருவ னொருதொனியைக்கேட்டுப்பயந்து பிறகு நெருங்கிப் பார்த்தவுடனே யங்கே தோலுங் கோலு மிருக்கக்கண்டானெனச் சிங்கம்–அதென்னவென் றுகேட்கத் தமனகன் சொல்லுகிறது: ஒருநரி பசியால்வருந்தி யிரைக்காகத் திரிந்துதிரிந்தொரு போர்க்களத்தில்வரும்போதங்கே யசதியிலுண்டான வொருபெரியதொனியைக்கேட்டு மிகவும்பயந்து நான்செத்தேனென்று திக்கிட்டது. பிறகு சற்றேமுன்னேபோனவுடனே யங்கேயொரு பெரியபேரியைப்பார்த்து–அதுகாற்றில்சைகிற அடுத்திருக்கிறமரத்தின்கிளையினு லடி

பட்டுத்தொனி யுண்டாயிற்றென் றறிந்துகொ ண்டதனருகேபோய்ப்பார்த்தங்கேபேரிகையின் றேலுங்கோலுமே யல்லாமல் வேறென்றுமில்லை யெனத்தெளிந்து சந்தோஷமடைந்தது. ஆத லாற் சத்தத்தினலேமாத்திரம்பயப்படலாகாது. தாங்கள் கட்டளைகொடுத்தா லிந்தச்சத்தத்தின் மூலத்தை யறிந்துவருவேனெனச் சிங்க மப்படி யே செலவுகொடுத்தது. பிறகு தமனகன் சஞ்சீ வகனென்னு மெருதினிடத்திற்போய்ப் பேசி ய தைச் சிநேகம்பண்ணிக்கொண்டு சிங்கத் தண் டைவந்து தண்டம்பண்ணி முன்னேநின்றது. சி ங்கம்-நீ யந்தப்பிராணியை யின்னதென்றறிந்து வந்தாயாவெனத் தமனகன்-தங்கள்கட்டளைப்ப டியே போய்ப்பார்த்தேன். முன்றுங்களெப்படி நினைத்தீர்களோ வப்படியே புஷ்டியாயிருக்கின் றுன். ஆனல்வன் றங்கணட்பைவிரும்புகிறுன். க ட்டளையானுற் றிரும்பிப்போய்த் தரிசனத்துக்கி ட்டுக்கொண்டு வருவேனெனச் சிங்கம்- நல்லது ப்படியே யாகட்டுமென, மறுபடி தமனகன்-எருது ண்டைப்போ யுபசாரத்தோடழைத்துவந்திராச சாவைத் தரிசனம்பண்ணுவித்தது. பிறகு பிங்க லனுக்குஞ் சஞ்சீவகனுக்கும் வெகுசிநேகமுண் டாய் ராசாவுக்கு மற்றியாரு மகத்தியமில்லாம லிப்படி வெகுகாலங்கழிந்தது. அப்போது பிர தானிபுத்திரர்களாகிய கரடக தமனகரென்னுமி ரண்டுநரிகளுக்குமிரையொன்றுமகப்படாமையா லாலோசிக்கத்தொடங்கின. தமனகன்-நாங்காட் டிலே தனித்திருந்தசிங்கத்துடனே யெருதைச்சி நேகம்பண்ணுவித்தது யானையானது தன்மத் தகத்தைக் கொத்துகிறதற் கங்குசத்தைத் தா னேயெடுத்துப் பாகன்கையிற் கொடுக்கிறுப்போ

லாச்சுது. மேலும் - முன்னு லாட்டுக்கடாச்சண்டையில்-நரிசெத்ததும்-ஆஷாடபூதியின் கூட்டுறவாற் சந்நியாசிபொருளிழந்ததும் - இடைச்சியின்சேர்க்கையா லம்பட்டத்தி மூக்கிழந்ததுமெப்படியவரவர்கள் குற்றத்தினுலேயேசம்பவித்ததோ-அப்படியேநம்முடையதோஷத்தினுலேநமக்கிவைகிட்டாமற்போயிற்றெனக்கரடகன்-அதெப்படிச் சொல்லெனத் தமனகன்சொல்லுகிறது:

ஒருதேசத்திற் றேவசன்மாவென்கிற வொரு சந்நியாசி தான்பிச்சையெடுத்துச் சம்பாதித்த திரவியத்தைக் கந்தைக்குள்வைத் தியார்க்குந் தெரியாமற்றைத்துப் போர்த்துக்கொண்டு பின்னும் பிச்சையெடுத்துச் சாப்பட்டுக்கொண்டுதிரிய-அந்தச்சூதையறிந்த-ஆஷாடபூதி யென்னுமொரு திருட்டுப்பிராமண னிந்தக் கந்தையை மாத்திர மெப்படியாயினுந் திருடிக்கொண்டாலெப்போதுந் திருட்டுவேலை செய்யவேண்டுவதில்லை, நம்முடையதாசிக்கு வெகுநாளைக்குநடக்குமென்றுலோசித்து - ஒருபிரமச்சாரியைப்போலந்தச் சந்நியாசியினிடத்திற்போ யவன்காலில்வீழ்ந் தடியேனுக்குஞானோபதேசஞ்செய்திந்நிசாரமாகிய சமுசாரசாகரத்தினு னின்னு மலையாமற் சிறிதுகடைக்கண்ணுற்பார்த் தென்னைக் கடைத்தேறப்பண்ணும், ஓமகானுபாவா பரதுக்கஞ்சகியாத வோபரமபுருஷாவென் றிப்படியழுதகண்ணுஞ் சிந்தியமூக்குமாகக் கலங்கிநிற்க-அதைப் பாசாங்கென்றறியாத-அந்தச் சந்நியாசி யிவன்றலைமேற்கையைவைத்துப் பயப்படாதேயென்றான். அதுமுதலாக-ஆஷாடபூதிவெகுபயபத்தியுடனே யவன்காலாலிட்டவேலையைக் கைமேற்செய்துகொண்டு கந்தைக்குச் சமயம்பார்த்

துக்கொண்டிருக்குநாளி லொருநா ளொருபிரா மணன்வீட்டி லிருவரும் விலாப்புறம்வீங்கப் பிச்சைபண்ணிக்கொண்டு வெகுதூரம்வந்தபிறகு-ஆஷாடபூதி யொருவருமறியாம லொரு துரும்பையெடுத்துத்தன்-தலைமேலேவைத்துக்கொண்டந்தத்துரும்பைக் குருவுக்கெடுத்துக்காட்டி - ஐயையோ நமக்குப்பிக்ஷைகொடுத்தபிராமணன்வீட்டுத்துரும்பென்றலையிலொட்டிவந்துவிட்டதே. அன்னமிட்டவீட்டிற் கன்னமிடலாமா? உப்பிட்டவரை யுள்ளளவுநினையென்று பழமொழியுமிருக்கிறதன்றேவென வாய்பதறநடுநடுங்கி யிதையந்த அன்னதாதாவீட்டிற்போட்டுவிட் டிதோ நொடியளவில் வருவேனென்று குருக்கள்பார்க்கும்படி பரபரப்பாகச்சிறிதுதூரங் காலடியிட்டத்திற்படும்படி யோடியொரு செடிமறைவிலு ட்கார்ந் திருந்துவிட்டுப் பின்பினைக்க விளைக்க வோடிவந் தாசாரியன் காலில்விழுந் தெழுந்து சுவாமி யும்முடையவநுக்கிரகத்தினு லிந்தப் பாவத்திற்குத் தப்பினேனென்றான். இதைப்பார்த்தந்தவேஷைச்சந்நியாசி-ஆச்சரியப்பட்டு - இவன் பரசொத்துக் காசைப்படாத பரமாத்துமாவென்றுநம்பித் தன்னுயிர்க்குச்சமானமாக தினைத்திருந்தகந்தையைச் சிஷன் கையிற்கொடுத்தொரு குளக்கரையிலிருக்கச்சொல்லித்தான்சலபாதைக்குப்போய்க் காலலம்பப்போன விடத்தில்-இரண்டாட்டுக்கடாக்க ளொன்றோடொன்று முட்டிச் சண்டைசெய்ய வதனுலொழுகுகிறவுதிரத்தை யுண்ணலாமென் றொருநரிபோயிரண்டுக்குநடுவி லகப்பட்டிறந்தது. அந்த-அநர்த்தத்தைப்பார்த்துக்கொண்டு சிறிதுநேரமிருந்தானப்போ தந்தச்சிஷ் னிதுதானல்லசமய மிதுவி

ட்டாலினிக்கிட்டுமோ? காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டுமென்று நினைத்துக் கந்தையைச் சுருட்டிக்கொண்டோடிப்போனு னுடனே சந்நியாசி வந்துபார்த்துச் சிஷனைக்காணுமல்-ஓகோ நம்மை யாஷாடபூதி யேய்த்தானே. இதோமோசம்போனேமேயென்று திகிற்பட்டுப் புக்கண்டம் பறிகொடுத்தபார்ப்பாத்தியைப்போலொருவருடனுஞ் சொல்லாமற் றேடிக்கொண்டுபோ யெங்குங்காணுமலன்றிராத்திரியொருபெரிய பட்டணத்தி லோரிடையன்வீட்டுத் தலைக்கடைத் திண்ணையில் வந்துசேர்ந்து நித்திரையில்லாமற்படுத் தெண்ணமிட்டுக்கொண்டிருந்தான். பொருளிழந்தசந்நியாசி யிப்படியிருக்கையில்-தன்புருஷினில்லாத வேளைப்பார்த்துப் பரபுருஷினிடத்திற் போகிறவளாகியவந்தவீட்டிடைச்சி அன்றைத்தினந் தனக்குத் தூதிகையாகிய-அம்பட்டத்திவந்துகள்ளப்புருடன் வந்திருக்கிறசெய்திசொல்லக்கேட்டுத் தன்புருஷ னில்லாதிருக்கக்கண் டவளுடனே கூடப்போனுள். போகும்போது புருஷினை திரேவரக்கண்டு வேறொருகாரியத்திற்குப் போனவள்போற் சாக்கிட்டுக்கொண்டு திரும்பிவீட்டுக்கு வந்துவிட்டாள். புருஷினந்தக்கபடத்தையறிந்து மிகுந்தகோபத்தோடும்போ யவளைவாய்சலிக்கத்திட்டி யொரு தூணிற்கட்டிக் கைசலிக்கவடித் திராத்திரிக்கெல்லா மிப்படியேயிரு வெள்ளாட்டியென்று நித்திரைசெய்தான். பக்கத்துவீட்டுக்காரியாகிய-அந்தத்தூதி மறுபடியும்வந்து-ஐயோ வவனங்கேயுன்விரகத்தினுற்செத்தாற்போற் கிடக்கிறுனே. இப்போதுன்னை யவிழ்த்துவிடுகிறே னென்னைக் கட்டிவைத்து நீபோயுன்னைக்கேட்கிறமனுஷினை

க்கண்டுபேசிவா. மறுபடி நானுன்னைக் கட்டிவைத்துப் போகிறேனென்றுசொல்ல - இதுநல்லவுபாயந்தானென்று தூதியை-அப்படியே கட்டிவைத்து விளக்கையு நிறுத்திவிட் டிடைச்சி சோரபுருஷனிடத்திற் போயிருக்கும்போ திடையன்விழித்துக்கொண்டு தூணிற் கட்டுண்டவளிடத்திற்போய்க் கோபத்தாலடித்தா னவளம்பட்டத்தியாகையா லதற்கொன்றுஞ்சொல்லாம லிருக்கக்கண் டிவள்சோரம்போனதுமெய்தானென்றுமிகவுங்கோபித்துக் கத்தியையெடுத்து மூக்கையரிந்து மறுபடியும்போய் நித்திரைசெய்யும்போது போனவிடைச்சி மறுபடிவந்து கட்டுண்டிருக்கிற தூதியைப்பார்த் தென்ன சமாசாரமென்றாள். தூதி மூக்குத்தவிர மற்றவை யெல்லா மெதாப்பிரகாரமிருக்கிறதெனப் பிறகவளைவிட்டுப் பழையபடியவளாற் றான்கட்டுண்டிருக்கையிலிடையன்விழித்துக்கொண்டா னவ்வரவமிவளறிந்து-அவனைப்பார்த்தையையோபாதகாவீணாக வென் மூக்கையரிந்து குரூபியாக்கினையே, ஒருவனுக்கு மொருத்திக்கும்பிறந் தொருவனுக்கு முன்றானைப்போட்டவளானா லென்மூக்கு வளரட்டு மென்சபதத்தை லோகரக்ஷகன் கேட்கட்டுமென்றுசொல்லிச் சும்மாவிருந்தாள். இடையனுடனே யெழுந்தோடிவந்துபார்க்கப் பழையபடி மூக்கிருக்கக்கண்டுபயந்தாச்சரியப்பட் டிப்படிக்கொத்தபத்தினி யொருத்தி யுலகத்திலிருக்கிறதினாலேதானே மழைபெய்கிறது, கட்டுங் கயில்லாம னிற்கிறதென நினைத்துப்பெண்மணியென்குலவிளக்கே தீண்டாநெருப்பே யென்னபராதத்தைப் பொறுத்திரக்ஷிப்பாயென் றவள்பாதத்திற் சாஷ்டாங்கமாகவிழுந்து கட்டையவி

ழ்த்துவிட்டுவிட்டான். இது விப்படியிருக்கமுன் மூக்கறுபட்டு முனைகுலைந்த தாதியானவளற்ற மூக்கைக் கையிலெடுத்துக்கொண்டு சீக்கிரமாக த்தன்வீட்டுக்குப்போ யிதையெப்படிமறைக்கலா மென்று விசாரப்பட்டுக்கொண் டிருக்கும்போது பொழுதுவிடிந்தது. விடியவே யம்பட்டனெழு ந்திருந்து வேலைசெய்யவேண்டும். அடைப்பத் தை யெடுத்துக்கொண்டுவாடியென்று கேட்டா ன். அவள்கதவின்பின்னேயிருந்தபடியே யொ ருகத்தியையெடுத் தவன்முன்னேவிட்டெறிந்தா ளவன்கோபித் தென்னடி யடைப்பத்தைக்கேட் டா லொருகத்தியை விசிறியெறிந்தாயென்றுபட படப்புடனே-அதைமறுபடி யவன்முன்னேயெ றிந் தான். எறிந்தவுடனேயவள்-ஐயோபாவி ய நியாயமாக மூக்கையறுத்துமுனையைக்குலைத்தா யேயென் றந்தக்கத்தியையு மறுபட்டமூக்கையு ங்கையிலெடுத்துக்கொண்டு மிகுந்த வாக்குரோ சத்தோடு தெருவிலோடிவந்து நிரபராதியாயி ருக்கின்றவென்னை யிந்தத்துஷ்டன் மூக்கையறு த்தானேயிந்தவூரிலாருங்கேட்பாரில்லையா? கூகூ வென்றலறியழுதா ளிதைத்தூதர்கண் டந்தநா விதனைப்பிடித்துக்கழுத்தைப்பற்றிநெட்டிக்கொ ண்டு நாவிதச்சியை யழைத்துக்கொண்டுபோய் ராஜாவுக்கறிவித்தார்கள். ராஜா அம்பட்டனைப் பார்த்து-அடா-இவள்மூக்கை யேனறுத்தாயெ ன-அவ னென்றுமுத்தரஞ்சொல்லாமல் விழித் தான். பிறகரச னிந்தத் துஷ்டனைக்கொண்டு போய்க்கழுவிலேற்றுங்களென்றுகட்டளைக்கொ டுக்க விந்தச்செய்தியையந்தப் பொருளிழந்தச ந்நியாசிகேள்விப்பட் டுடனே ராசாவினிடத்திற் கோடிவந்து-மஹாராஜாவே யிவனபராதியல்ல

வீவ்வாச்சரியமெல்லா நானறிவேன். எப்படியா ட்டுச்சண்டையி னரியிறந்ததோ-எவ்வா றுவிரா டபூதியின்சேர்க்கையா லென் பொருள்போயிற் றோ வப்படியே யிடைச்சிசகவாசத்தினு லிவண் மூக்கிழந்தாளென் றெல்லாஞ் சாங்கோபாங்க மாகச்சொல்லி யிம்மூன்றுந் தங்கடோஷமேய ல்லாமன் மற்றொருவரிடத்திலுமில்லையாகையா ல மிபட்டனேயநியாயமாய்க்கழுவேற்றுவானேனெ ன-இவையெல்லாஞ்செட் டிராசா விவர்களைவிட் டுவிட் டிடைச்சியைப் பிடித்துவரச்சொல்லி யவ ளைமூக்கையறுத்தனுப்பினுன். இவ்விதமேவிபசா ரிகளுந் தூதிகளும் அநேகமுறை யிவ்வுலகத்திலே யே-ஆக்கினைப்படுகிறார்களென-இதைக்கேட்டுக் கரடக னிதற்குநான் செய்யத்தக்க தென்னவெ ன்றுகேட்கத் தமனகன் யாதொன்று போயிற் றேவதை மறுபடி சேகரிக்கவேண்டு மெதுசம் பாதிக்கவில்லையோவதைச்சம்பாதிக்கவேண்டும். எதிராகவருகிற விக்கினங்களைத் தடுக்கவேண்டு மென் றிப்படியாலோசித்துப் பண்ணுகிறவனல் லவோ மந்திரி. ஆனுலிப்போது நமக்குப் பிங்கல சஞ்சிவகர்களுடைய சிநேகத்தா லெல்லாச்சங்க டமுநேரிட்டது. இவர்களுடையநட்பைப்பிரித்தா ற்று னமக்கிவ்வளவன்னங்கிடைக்குமென்றுசொ ல்லக் கரடகனந்தப்பிங்கலசஞ்சீவகர்க ளுறவைக் கெடுக்க யாராலாகும். மணியினின்றுமொளிபிரிக் கப்படுமோ? இது முடியாதகாரிய மல்லவோவெ னத் தமனகன்-என்னசொல்லுகிறு யுபாயத்தா லாகிறது பராக்கிரமத்தாலாகுமோ? ஒருகாகஞ் சொர்னமாலையா லொருகிருஷ்ண சர்ப்பத்தைக் கொன்ற தறியாயோவெனக் கரடக னதெப்படி யென் றுவலோடுகேட்கத் தமனகன் சொல்லத் தொடங்கிற்று.

ஒருபெரியமரத்திற் கூடுகட்டிக்கொண் டாணு
ம்பெண்ணுமாகிய விரண்டுகாக்கைகள்-நெடுநா
ள்வாழ்ந்திருக்கும்போது - அந்த மரப்பொந்தி
லொருநாகம் வந்துசேர்ந்தந்தக்காக்கையிடுகிற
முட்டைகளையெல்லாங் குடிக்கக்கண் டிதற்கென்
னசெய்யலாமென்று மிகவும்விசனப்பட்டுத்தன
க்குச்சிநேகமாகிய நரியிடத்திற்போய் நடந்தச
ங்கதிகளைச்சொல்லி யிப்போதாகிலு முட்டைகளை
க் காப்பாற்றுகிறதுக் கென்னசெய்யலாமென ந
ரி-ஒருநண்டானது வெகுநண்டாசையைக்காட்
டிக் கொக்கைக்கொன்றுற்போ லதையோருபாய
த்தாற் கொல்லவேண்டுமெனக் காகம் - நண்டு
கொக்கை யெப்படிக்கொன்றது?சொல்லுமையா
வென நரிசொல்லுகிறது:

மீன்களையே மிகுதியுந் தின்றுவளர்ந்த வொ
ரு கிழக்கொக்கானது குளக்கரையில்வந்து விச
னமாயுட்கார்ந்திருந்தது. அப்போ ததிலிருந்த
மீன்கள் கொக்கைப்பார்த்து நீ யுன்னுகாரத்தை
விட்டுச் சும்மாவுட்கார்ந்திருப்பானேன்? சொல்
லெனக் கொக்கு நான்மீன்றின்பது மெய்தான்.
ஆனு லின்றைக்கிங்கே செம்படவன்வந்தெல்லா
மீன்களையும் பிடிக்கவிருக்கிறு னிதனு லென்னு
டையவிரைகளெல்லா நிர்மூலமாய்ப் போகுமே
யென்றேங்கிச் சும்மாவிருக்கிறேனென - இதைக்
கேட்டு மீன்களெல்லாங்கூட்டங்கூடி யெவ னம
க்குபாயஞ்சொன்னுனே வவனே யுபாயஞ்சொல்
லுவானென் றுலோசித்துப் பிறகு கொக்கைப்பா
ர்த்து நீயெங்களையிப்போதிரட்சியெனக்கொ
க்கு நான்செம்படவனேடு சண்டைபண்ணச்சம
ர்த்தனல்ல.மேலு நான்கிழவன். ஆனு லுங்களை
வேறேரிடத்திற்குக் கொண்டுபோவே னதனுலெ

ணக்கு மிந்தத்தள்ளாமையானகாலத்திற் பரோபகாரியென்கிற பெயரும்வரும். நீங்களும் வெகுகாலம் பிழைத்திருப்பீர்களென-அப்போ தந்தப்பேதைமையான மீன்களெல்லாம் பிராணனைக்காப்பாற்றும்பொருட்டு-அதன்பேச்சைநம்பி நல்லதப்படியே கொண்டுபோக வேண்டுமெனக்கெஞ்சப் பிறகு-அந்த வஞ்சனையானகொக்கு நடைக்கொவ்வொன்றாகக் குளத்திலிருக்கிற மீன்களையெல்லா மூக்கினாற்கௌவிக்கொண்டுபோய்ச்சிலமீன்களைத் தின்று மற்றைமச்சங்களை யொருபெரியபாறையின்மே லுலரவைத்தது. பிறகந்தக்குளத்திலிருந்த வொருநண் டிந்தக்கொக்கைப்பார்த்து-ஓசீவகாருணியனே யென்னையு மவ்விடத்திற் கொண்டுபோகவேண்டுமென் வேண்டிக்கொள்ளக் கொக்கு வருங்காலத்திலெல்லாம் வலியவருமென் றுள்ளுக்குள்ளே சந்தோஷித்து-அப்படியே நண்டையுங் கௌவிக்கொண்டுபோகும்போது நண்டு வழியின்மீன்கள் செத்துக்கிடக்கிறதையு மீன்முட்கள் சிந்திக்கிடக்கிறதையும் பாறையின்மே லுலருகிறதையும் பார்த்து - ஐயோபலமீன்களையுங் கொன்று நம்மையுங்கொல்லவந்தது, நம்மைக்கொல்வதற்குமுன்னமே நாமிதைக் கொல்வோமென் றோருபாயநினைத்துக்கொக்கைப்பார்த்து, நீயென்னை வருத்தப்பட்டுக்கொண்டுவந்தாய், ஆனாலங்கே யென்னுடைய பரிவாரங்களிருக்கின்றன, ஆகையாலங்கே யென்னைநீ மறுபடியுங்கொண்டுபோனா லவைகளையுங்காண்பிப்பேனென, அதைக்கேட்டுக்கொக்குப்பேராசைப்பட்டுத்திரும்பியந்தக்குளத்துக்குச் நேரவருகையில், நண்டுகொடுக்கினா லந்தக்கொக்கின்கழுத்தை யிரண்டுதுண்டாகநறுக்கிக் குள

த்தில்வீழ்ந்து சுகமாய்வாழ்ந்தது. ஆகையாலந்தக்கொக்கைப்போலப் பாம்பையுங் கொல்லவேண்டுமெனக் காகம்-அப்படிப்பாம்பைக் கொல்ல நான் செய்யவேண்டியவுபாயமென்னென்றுகேட்க, நரி நீயிப்பட்டணத்துராசகுமாரி குளிக்கிற மஞ்சனச்சாலைக்குப்போ, அவள் ஸ்நானம்பண்ணும்போ தாபரணங்கள்கழற்றிவைத்திருக்கும்-அந்தவாபரணங்களி லொன்றையெடுத்துச்சனங்கள்பார்க்கும்படி கொண்டுவந்தந்தமரப்பொந்திற் போடென்றுசொல்லக் காக்கையு மப்படியேசெய்ய வந்த விராசனுடைய் வேலைக்காரர் போ யந்தமரத்தின்பொந்தைப்பிளக்க நாகஞ்சிறிவந்தது- வரவேயிரண்டு துண்டாக நறுக்கியெறிந்தார்கள். அதனாற்காகத்தின்காரிய நிறைவேறிற்று. ஆதலாலுபாயத்தா லெல்லாங்கைவசப்படும். எவன்புத்திமானோவவன்பலவான். எவனுக்குப்புத்தியில்லையோ வவனுக்குப் பலமெங்கே? பூர்வம் புத்திபலத்தினா லொருமுசல்சிங்கத்தைக் கொன்றதெனக் கரடக னதெப்படியென்று கேட்கத் தமனகன்சொல்லுகிறது:

ஒருநெருங்கியகாட்டின் மதோன்மத்தனென்னுஞ்சிங்கமான தந்தக்காட்டிலிருக்கிற மிருகங்களையெல்லாங் கொன்று தின்று கொழுத்து வெறிகொண்டு திரிகிறநாளின் மிருகங்களெல்லா மொன்றாகத்திரண்டுபோய் ஓய் மிருகேந்திரா வுன்னுடையகாட்டிலிருக்கிற மிருகங்களையெல்லா மிப்படிக்கொன்றால் மிருகங்கள் - நிர்மூலமாய்ப்போம். ஆதலால்-தினமொவ்வொன்றுனக் கிரைகொடுத்துக்கொண்டு வருகிறோம். அதைநீர்பக்ஷித்துக்கொண்டிருக்கலாமென்று பிரார்த்திக்கச் சிங்கம்-மெய்தானென்று நம்பி யப்படியேசெய்

று லோசித்து மௌ...
ண்பசிவேளைத்தப்பிவரச் ...
யானையாலு மென்னுடைய ப...
ருகிறதில்லை, நீயெவ்வளவுபிராணி...
சமாய் வரலாமாவென்று மிகுந்தகே...
கையைத் தரையிலேமோதிக்கேட்க, ...
னே—இதுவென்குற்றமன் றுன்னுடைய
ளைக்கேவந்தேன். வந்தவழியி லொரு பெ...
தசிங்கத்தைக்கண்டு பயந்தொளித்திருந் த...
ச்சிங்கம்போனபின்பு வந்தேனென்றுசொல்ல...
சிங்க—மன்னையல்லாம விந்தக்காட்டில் வேறே
சிங்கம்—நீபார்த்தாயா? காட்டுவாவென் றழைக்க
வழைத்துக்கொண்டுபோய்ச் சேறுநீரு மிகுந்த
வொருபாழ்ங்கிணற்றை யிதிலே யிருக்கிறதென்
று—காட்டச் சிங்கமுசலின்பேச்சை நம்பிக் கிணற்
றையெட்டிப்பார்த் ததிற்றோற்றின தன்னிழலை—
அந்தச் சிங்கமிங்கேயிருக்கிறதென் றுநினைத்துமி
குந்தகோபத்தோடதைக்கொல்லவேண்டுமென்
று—அதிற்பாய்ந்துசேற்றிலமுந்தியிறந்தது. ஆ
கையா லெவன்புத்திமானோ வவன்பலவானென்
றுனக்குச்சொன்னேனெனக் கரடகன் சொல்லு

துட
சவக னும்மிடத்தில்வி
மமுடையராச்சியத்தைப் பி
கிறதற் கிச்சித்திருக்கிறுன். இ
யென்று நினைத்துக் கோபித்தாலு
டித்தாலும்-இராசனுக் கொருதுன்
பாது தன்னலத்தைப்பாராமல்-ராச
நல்லவுபாயங்களைப்போதித்துச்செய்யத்த
ரியங்களைச் செய்வித்தல்-மந்திரிகளுக்கு நீ
தொழிலாகையா லுமக்கிதைத் தெரிவித்தே
னெனப் பிங்கலனிதைக்கேட் டாச்சரியப்பட்டுச்
சும்மாவிருந்தது. பின்னுந்தமனகனவனை நீர்மு
க்கியப் பிரதானியாக்கினீர். அப்படியேயிருக்க
ட்டுமெனக்கென்ன? ஆனால்-ராசாவும்பிரதானியு
ஞ் சமானமாயிருந்தா லிராசயோகமிருவரிலொ
ருவனைவிடும். மேலும்-எப்போதிராசா வொருவ
னையே பிரதானியாக்குகிறுனே அப்போதந்தப்
பிரதானிக்குக் கர்வமுண்டாகிறது. ஆகையா ல
வன்சுதந்தரனுய் ராச்சியவாசையாலிராசாவை
க்கொல்ல விச்சிக்கிறுனுகையா லிப்படிப்பட்டமந்
திரியை வேரோடுகளையவேண்டுமில்லாவிட்டால்

---

* இவ்விடத்திலு மற்றச்சிலவிடத்திலும் தன்னெதிராளி
களைவெல்லுதற் கேவியிருக்கிற பொய் சூது கொலைமுதலி
யஉபாயங்கள் சுகிர்தவொழுக்கத்தோ டொவ்வாதென்ற
றிக.

வனுற் றீங்குநேரிடும். இது தங்கட்குச்சொல்ல வேண்டுமா? தாங்களெல்லா மறிந்திருக்கிறீர்கள். லோகத்திற் செல்வத்தை விரும்பாதவ னருமை-என் றிப்படி யெல்லாஞ் சொல்லக்கேட்டுச்சிங்கநகைத்துச் சஞ்சீவகனிடத்தி லெனக்கிருக்கிறசிநேகம்போகாது. ஏனென்றால் மித்திரர்களநேக மந்நியாயம்பண்ணினு லு மதைப்பிரியமாகவே நினைக்கவேண்டுமெனத் தமனகன் - இது தான்புத்திக்குத்தோஷமிதனுலுமக் கபாயம்வரும். ஏனென்றால் யாதொருவன் சாதுக்கள்புத்தியைக்கேளாமற்றுஷ்டர்புத்தியைக்கேட்கிறனே-அவன் மருந்துதின்றதரோகியைப்போல விபத்தையடைவான். காதுக்கினிமையாயு மிதம்பண்ணுகிறதாயுமிருக்கிற வசனந் துர்லபம், காதகனுடையவசனஞ் செவிக்கினிமையாயிருக்குமாகு லதுகேட்கலாகாதெனச் சிங்கம்-நா னபயங்கொடுத்துரக்ஷித்தவனெனக்குத்துரோகம்பண்ணுவானு? என்ன பேச்சுப்பேசுகிறுய்? போவெனமறுபடி தமனகன்: துஷ்டர்கள்குணமாறுமா? நாயின்வாலைக்குணக்கெடுக்கலாமா? எட்டிமரத்துக்கமுதம்வார்த்துவளர்த்தாலு மதற்குத்தித்திப்புண்டாகுமா? ஆகையாற்றுங்கள் கேளாமலிருக்க விந்தவிர்த்தாந்தத்தைச்சொன்னேன். ஏனென்றால்-பிறர்க் கிதம்பண்ணுவது சாதுவுக்கு முக்கியதர்மம். இனிமேலென்மேற்குற்றமில்லை. யாதொருசமயத்தில் ராசாபாமரர்களுடைய புத்தியைக்கேட்டுச் சங்கடப்படும்போது காரியகாரர்மேற்குற்றஞ்சுமத்துகிறுதலானுன் சொன்னேனென்றிப்படிச்சொல்லிச் சும்மாவிருந்தது. அப்போதுசிங்கஞ்சொல்லுகிறது. இதை நான் சஞ்சீவகனுக்குச் சொல்லவேண்டுமெனத் தமனகன்-அவ

னுக்கிதைச்சொன்னு லவன் சாக்கிரதைப்பட்டு வேறோருபாயத்தினுற் பொல்லாங்குதேடுவான், ஆகையாலிதை யவனுடன் சொல்லாதிருப்பதே யோக்கியம். ஏனென்றால்-ராசாவின் மந்திராலோசனை ரகசியமாக விருக்கவேண்டுமென - இதைக்கேட்டு மறுபடிசிங்கம்-அந்தச்சஞ்சிவகன் விரோதப்பட் டென்னசெய்யமாட்டுவா னவன் சாமர்த்திய மெவ்வளவென்று சொல்ல நரியவனை நாமறியமாட்டோம். அவன்பராக்கிரமமுஞ் சுபாவமு நமக்கெப்படித்தெரியும்? ஒருவன்குணத்தையறியாமற்சேர்க்கலாகாது?சேர்த்தாலொருசிலைப்பேன் மூட்டுப்பூச்சியைச்சேர்த்து நாசமடைந்தாற்போ லாகுமெனச் சிங்க மதெப்படிச் சொல்லெனத் தமனகன்சொல்லுகிறது:

ஒருராசாவின் பஞ்சணையின் மந்தவிசர்ப்பணியென்னு மொருசிலைப்பேன்-நெடுநாளாகவாசம்பண்ணிக்கொண்டிருக்கையி லொருநா ளிதன்வீட்டுக்கு-டிண்டிபனென்னு மூட்டுப்பூச்சி வந்தது. அதைப்பார்த்துச் சிலைப்பேன்-அப்பா நீ பொல்லாதவன், முட்களைப்போன்ற பற்களினாலே தூங்குதற்குமுன்னமே துடுக்காய்க்கடிப்பாய்.நீசமயந்தெரியாதவ னுதலால்-நீ ராச சயனத்திலிருக்கத் தக்கவனல்ல. இவ்விடம்விட்டோடிப்போவென்றுகடுகடுத்துச்சொல்ல மூடு நானப்படிச்செய்யவில்லை,நீர்சொன்னபடியே கேட்பேனென்று காலில்விழுந்து பிரார்த்திக்கச் சிலைப் பேன்மனதிரங்கிநல்லது,நீவெடுக்கென்றுகடியாமல்-நித்திரைசெய்யப்பார்த்து மெற்றெனக் கடித்துக் கொஞ்சரத்தங் குடித்தியென்றுசொல்ல-அப்போ தந்தமூட்டுப்பூச்சிநல்லதென்றிருந்து பிறகு ராசாவிழித்திருக்கும்போதே சுறுக்கென்

னுகடிக்க-ராசன் றிடுக்கென்றெழுந்திருந் தென்னமோகடித்ததென்று சோதனைக்காரருடனே சொல்ல வவர்கள் விளக்குக்கொண்டு சோதிக்க முகடுசீக்கிரமாய்க்கட்டிற்சந்திலொளித்துக்கொண்டது. அதற்கிடங்கொடுத்தசீலைப்பேனகப்பட்டது. நீயல்லவாவெங்களிராசனைக் கடித்தாயென்று நசுக்கிக்கொன்றார்கள்.ஐயோவகைதெரியாமலிறந்தது. ஆகையா லொருவன் குணத்தைத்தெரிகிறதற்குமுன்னே யவனுடனே சகவாசம்பண்ணலாகாதெனக்கேட்டுச்சிங்கம்-அந்தச்சஞ்சீவகனுடையதுஷ்டசுபாவமின்னபடியென்றெனக்குத்தெரிந்தா லப்போதுநிசமென்று சொல்லத்தமனகன்-அந்தவெரு தும்மைக் கொல்லநினைத்துத் தன்கொம்புகளை முன்னிட்டுக்கொண் டும்முடைய சந்நிதியில்வரும்போது தங்களுக்குத்தெரியவருமென்று சொல்லிவிட்டு-எருதி னிடத்திற்குப்போ யங்கேதன்மனதின் மிகவும் விசனமிருக்கிறதாகத்தோற்றுவித்தது. அப்போது சஞ்சீவகன்மித்திரா சுகமாவென்றுகேட்கத் தமனகன்-சேவகனுக்குச் சுகமெங்கேயிருந்துவரும்? சம்பத்தும்விபத்துங் கூடவேயிருக்கின்றன-ராசாவுக்குப்பிரியமா யாரிருக்கிறார்கள்? யாசகன்சம்மானத்தையடைவானு? ஆகையா லிந்தக்காலமேதுதனக்குமித்திரன்யார்?தன்வலியெவ்வளவென்றெப்போதும் விசாரித்துக்கொண் டிருக்கவேண்டுமென- இதைக்கேட்டுச் சஞ்சீவகன் - இப்படியேன்சொல்லுகிறுயெனத் தமனகன் ராசகாரியத்திலுண்டாகிய வஞ்சகத்தைமற்றொருவரோடுசொல்லலாமோ? ராசாவறிந்தாற்கொல்லுவான். ஆனுலு நீயென்னம்பிக்கையாலே சிங்கத்தோடேசிநேகம்பண்ணினதினுலே யுனக்குச்சொல்லுகிறே

ன். அதென்னவென்றால்—அந்தச்சிங்க முன்மேன் மிகவுங்கோபமாயுன்னைக்கொன்று தன்னுடைய சேனைக்கெல்லா நல்லவிருந்திட நினைத்திருக்கிற தென்றுசொல்ல - அதைக்கேட்டவுடனே சஞ்சீவகன் வருத்தத்தோடுஞ் சஞ்சலத்தோடுமாலோசித்துக்கொண்டிருந்தது. தமனகன் வேறேயாலோசனையென்ன? யாதொன்றுசம்பவித்ததோ வதற்குத்தக்கதாக நடக்கவேண்டுமெனச் சஞ்சீவகன்—நீசொன்னதெல்லாஞ் சரிதான். உலகத்திலுமப்படியேயிருக்கிறது. எப்படியென்றால் - சாதாரணமாய் ஸ்திரீகள்—துர்ச்சனர்களுக்குவசமாயிருக்கிறார்கள். ராசாக்கள்—துஷ்டர்களைப்பரிபாலிக்கிறார்கள். துஷ்டனுடனேமிகவுஞ்சிநேகித்தாலவன் விபரீதமாகநினைக்கிறான். ஏனென்றால்—குருடனுக்குக் கண்ணாடியைக்காண்பித்தாலும்—செவிடன்காதி லுபதேசித்தாலும்—அவர்கள் விபரீதமாகவே நினைப்பார்களாகையால்—துஷ்ட னப்படிவிபரீதமாகநினைக்கிறான். எப்படிச் சந்தனமரம் பாம்போடுகூடியிருக்குமோ—எவ்வாறுதாழை முள்ளுக்களோடு கூடியிருக்குமோ வப்படிப் பெரும்பாலும் ராசாக்கள்துஷ்டர்களாற் சூழப்பட்டிருக்கிறார்கள். ஆகையா லிப்படிப்பட்ட பொல்லாங்கு நமக்குநேரிட்டதென விதைக்கேட்டுத் தமனக னந்தச்சிங்கத்துக்கு வாய்ப்பேச்சுமாத்திரந்தித்திப்பேயல்லாமன் மனதுமிகவுங் கடூரந்தான். பூர்வங்கர்த்தாகடலைக்கடக்கிறதற்குக் கப்பலுண்டாக்கினு னிருட்டைப்போக்கடிக்க விளக்கைச்சிருட்டித்தான். யானையையடக்க வங்குச நிருமித்தான். ஆனால் துஷ்டர்களுடையமனதடங்கும்படி யாதொன்றுஞ்செய்யாமல்விட்டானென விவையெல்லாங்கேட்டுச்சஞ்சீவகன் பெருமூ

ச்செறிந்துசொல்லுகிறது:பெரியபொல்லாங்கெனக்குநேரிட்ட திதைத்தப்பித்துக்கொள்ள வெனக்குச்சாமர்த்தியமில்லை. சாவினுடையவாயிலகப்பட்டவ னெப்படித்தப்பிப்போவான்?எப்படியொருகுற்றமுமில்லாத வொட்டையைக் காகமுதலானவை கூடிக்கொலை செய்தனவோ வப்படி வஞ்சனைபண்ணுகிறதுஷ்டர்க ளொருவனிடத்திற் குற்றமில்லாமலே கொலைசெய்கிறார்களென் த் தமனக னதெப்படியண்ணே சொல்லவேண்டுமெனச் சஞ்சிவகன்சொல்லுகிறது:

ஒருகாட்டின் மதோற்கடனென்கின்றவொருசிங்கம்-நரியையும் புலியையுங் காக்கையையுந்தனக்கு மந்திரியாகவைத்துக்கொண்டரசாளுகிறநாளி லொருநாளந்தக்காட்டி லொட்டகமொன்று வழிதப்பிவரக்கண்டு மந்திரியாகியகாக்கை நீயாரொன்றுகேட்க வந்தவொட்டகம்-நான் வழிதப்பிவந்துவிட்டேனென்றுசொல்ல - அதையிட்டுக்கொண்டுபோய்ச் சிங்கத்தினிடத்தில்விட்டு நடந்தகாரியத்தைச்சொல்லவந்தச்சிங்கங்கேட்டுப் பயப்படாதே நம்முடைய மந்திரிகளுடனே நீயுமொரு மந்திரியாயிருவென் றபயங்கொடுத்து மந்தானகனென்றுபெயரிட் டதைத் தன்னிடத்தில்வைத்துக்கொண்டது. இப்படிவெகுகாலஞ்செல்லுகையி லொருநாள் - சிங்கத்துக்குச் சரீரம்-அசக்தமா யிருந்தபடியினா லம்மூன்றையு மழைப்பித் தின்றைக்கென்னா லிரைசம்பாதிக்கக்கூடாதாகையால்-நீங்கள்போ யெனக்கேதாவ திரைகொண்டுவரவேண்டும். பிறகுநான் றின்று மிருந்ததை நீங்கடின்னலாமென-இம்மூன்றுஞ் சிங்கத்தின்கட்டளைப்படி யந்தக்காட்டிற்போ யிரைதேடிப்பார்த் தகப்படாமையா லப்போது தங்க

ளோடு கூடவிருந்த மந்தானகனைத் தூரத்திற்
போம்படி யொருவேலைவிட்டுக் காக மற்றையிரு
வரையும்பார்த் தின்றைக்குநா மந்தானகனையி
ரையாகத்தருவோம். புல்லுந்தழையுந் தின்னுகிற
வனானமக்குப்பிரயோசனமென்னவென மற்றிர
ண்டுஞ்சரிதான், ஆனாலவனுக்கு நம்முடைய ரா
சா வபயங்கொடுத்திருக்கிறதினா லவனை நாமெப்
படிக்கொல்லலாங்கூடாதெனக்காகம்—ஆனாலி
ன்றைக்குச் சிங்கத்தின்கையாற் றப்பாமன் மர
ணமடைவோம். ஏனென்றால்—பசியெடுத்தாற் றா
யும் பிள்ளையைவிட்டுவிடுகிறாள், பாம்பு தானிட்ட
முட்டைகளைக் குடிக்கிறது. ஆகையாற் பசியாற்
பீடிக்கப்படுகிறவ னெந்தப்பாதகந்தான் பண்
ணமாட்டா னிதுவுங்களுக்குத் தெரியவில்லையா
வென்றுசொல்லி யுடனே சிங்கத்தண்டைபோய்
க்காகஞ்சொல்லுகிறது: சுவாமி யின்றைக்கெதுவு
ங்கிடைக்கவில்லையென—ஆனாலிதற்கென்ன வுபா
யம்பண்ணலாமெனச் சிங்கங்கேட்கக்காகம்— தங்
கள்சுவாதீனத்தி லிரையிருக்கையில் வேறே யா
லோசிப்பானேன்? வெண்ணெயைவைத்துக்கொ
ண்டு நெய்தேடலாமாவெனச் சிங்கம்—என்னிட
த்தாகார மெங்கேயிருக்கிறதெனக் காகம் — மந்
தானகனென்னு மொட்டையிருக்கின்றதேயென
விதைக்கேட்டுச் சிங்கம்பூமியைக்கையாற்றட்டு—
ஆசுவாமீயெனக் காதின்மேற்கையைவைத்துநா
னவனுக் கபயங்கொடுத்திருக்கையி னீங்களிப்படி
விபரீதவார்த்தை சொல்லலாமா? அடைக்கலம்பு
குந்தவர்களைக் கைவிடலாமா? பசு—பூமி—தானிய
மிவற்றின் றானத்தைக்காட்டிலு மபயதானமதிக
ம். நைவேத்தியபுண்ணியத்தைக்காட்டிலு மிந்
தப்புண்ணிய மதிகமென்று சாஸ்திரமு மிருக்கி

றதேயெனக்கேட்டுக் காகம்-ஐயா வென்றொருவி
ண்ணப்பத்தைக் கேட்டருளும், ஒருகுலத்துக்காக
வொருவனை விட்டுவிடலா மொருகிராமரக்ஷிணை
க்காக வொருகுடும்பத்தைத் துறக்கலாமொருதே
சபாலனத்தின்பொருட் டொருகிராமத்தைக்கை
விடலாந் தன்னிமித்தந் தன்பூமியைவிடலாம். ஆ
கையாலிது தப்பன்று. ஆகிலுமவனைத் தாங்கள்
கொல்லவேண்டாம். நாங்களே தன்னையிரையா
கக்கொடுக்கச்சொல்லுவோம். இல்லாவிட்டா ல
வனே சாவுடன்பட்டென்னைக் கொல்லுங்களெ
ன்பானப்போது நாங்களப்படிச்செய்வோமெ
ன்று காகஞ்சொல்லச் சிங்கஞ் சும்மாவிருந்தது.
பிறகு காகம்-அதையே கட்டளையாக நினைத்துக்
கொண்டுபோய் மற்றையிரண்டையு மிட்டுக்கொ
ண்டு சிங்கத்தின்கிட்டவந்து சுவாமி யின்றைக்
கொன்று மாகாரமகப்படவில்லை யதனு லுங்களு
க்கின்றைக்குப் பட்டினியிருக்கலாச்சுது. அப்ப
டியிராம லென்னைப்பொசிக்கலாமென நீயெவ்வ
ளவு? உன்னையுண்டதினுலென்பசிதீருமா? உன்னு
டலென் கடைவாய்ப்பல்லுக்குப்போதுமா வென்
றுகேட்க நரியப்படியானு லென்னைத் தின்னெ
ன்றுநிற்க நீயு மப்படிதான்-நீ யதிகமல்லவென்
றுமறுக்கப்புலி-இவ்விருவரிலு நான் பெருத்திரு
க்கிறதினு லென்னைப்பக்ஷித்துப் பசிதீருமெனச்சி
ங்க நீதானெனக் கெவ்வளவினை? உன்னைப்பெரி
தாக நினைத்துக்கொண் டிருக்கிறையோ வென்று
சொல்ல-ஒட்டக மிதைப்பார்த்துச் சுவாமி நா
னெல்லாரைக்காட்டிலும் பெருத்திருக்க வில்லை
யா? சித்தமானு லென்னைக்கொள்ளலாமென வி
தைக்கேட்டவுடனே புலியும்-நரியும் பாய்ந்தவி
ழுந் தந்தக்ஷணமே-ஐயோ-அதைக்கொன்றெ

ல்லாம்புசித்தன. ஆகையா லெங்கேமிகவுங் கீழ்க ளிருக்குமோ வங்கேசுகமிராது. பிராணனுக்கு நாசம்வருமென்றே நினைக்கவேண்டு மிவ்விடத் திலு மப்படியேயிருக்கிறது. ஆனாற் றுஷ்டர்கை யிலகப்பட்டுச் சும்மாவிறக்கிறதைக்காட்டி லுஞ்ச ண்டைசெய்வதேயோக்கியம். எனென்றானல்வீர ன்சண்டைமுனையிற் செத்தாற் பரகதியடைகிறா ன், சத்துருவைச்செயித்தா லிராச்சிய மடைகிறா னாதலால்-சூரர்களுக்குச் சாவும்பிழைப்புஞ்சமா னமென்றது. அதைக்கேட்டுத் தமனகன்சொல் லுகிறது: பகைவர்களுடைய பராக்கிரமத்தை ய றியாம லெவன்பகைத்துக்கொள்ளுகிறானோ அவ ன் சமுத்திரஞ்சிட்டுக்குருவியினா லெப்படியவமா னமடைந்ததோ வப்படி யவமானமடைவானென ன-அப்போது தம்பியதெப்படியென்று சஞ்சீவ கன் கேட்கத் தமனகன்சொல்லுகிறது:

சமுத்திரக்கரையி லிரண்டு சிட்டுக்க ளாணும் பெண்ணுமா யொருசெடியின்கீழ்க் கூடுகட்டிக் கொண்டிருக்கும்போது பெட்டை-ஆண்பறவை யைப்பார்த் தெங்கேமுட்டையிடலாமென்று கே ட்க-ஆணிதுவே நல்லவிடமென்றுசொல்லப் பெ ண்-இந்தக்கடற்கரையி லொருவேலையபாயநேரி டுமென-ஆண்சிட்டு சமுத்திரத்திற்கென்னுடனே பகைத்துக்கொள்ளச் சாமர்த்திய மில்லையெனப் பெண்-உனக்குஞ் சமுத்திரத்திற்கும் வெகுதார தம்மிய மிருக்கின்றதே. எவன் றன் வலியும் பி றன்வலியும் பார்க்கிறதில்லையோ வவன் விபத் தை யடைவான், எவன்பார்க்கிறானோ வவன் சுக மடைவான். மேலுந் தனக்கிதம்பண்ணுகிறமித் திரன்பேச்சைக் கேளாதவ னாமையெப்படிக்கழி யைவிட்டு மரணமடைந்ததோவப்படியேமரண

மடைவானென-ஆணதெப்படி பெண்ணே சொல்லடியெனப் பெட்டைக்குருவி சொல்லுகிறது:
விகடசங்கடமென்னு மிரண்டன்னமுங் கம்புக்கிரீவனென்னு மாமையும்-சிநேகமாயொரு குளத்தில் வாழ்ந்துகொண்டிருக்கையில் - அன்னங்கள்-இப்போதிங்கே மழைபெய்யாமையாற் குளம்வற்றிப்போமாகையாலினி வேறொரு குளத்திற்போய்ச்சேர்வது யோக்கியமென்று நினைத்து-ஆனாலிதை நம்முடையசிநேகனுக்குஞ்சொல்லவேண்டுமென் றுலோசித்தப்படியே யதற்குச் சொல்லும்போது கம்புக்கிரீவ னீங்கள் செப்பட்டையினாற் பறந்துபோவீர்க ளென்வேறேரிடத்திற்கெப்படி வருவேனென விகடசங்கடர்கள் - ஆனாலெங்கள் வார்த்தையி னம்பிக்கைவைத்துஸ்திரமாயிருப்பையானா லுன்னையுங் கொண்டுபோவோம், கொண்டுபோகையில் வழியிலேதொன்றும்பேசாமலிருந்தாற்போகக்கூடுமென்றுசொல்லி யொருகழிகொண்டுவந் தாமையைப் பார்த்திந்தக்கழியைப்பல்லினாலேபலமாய்க்கடித்துப்பிடித்துக்கொள்ளு, விட்டுவிடாதே, நாங்களிருவரு மிதையிருபுறத்திலு மூக்காற் கௌவிக்கொண்டாகாசமார்க்கத்திற் போகிறோமென்றுசொல்லியந்தக்கொம்பை யிரண்டும்பற்றிக்கொண் டெழும்பிப் பறந்துபோகையி லிதையொரு பட்டணத்துச் சனங்கள்பார்த் ததிசயித்து நகைத் தெல்லோரு மொருமிக்க-ஆ-இதென்ன?இரண்டு பறவைக ளொருகழியைத்தூக்கிக்கொண் டதையாமையினாற் பிடிப்பித்துக்கொண் டதைக் கொண்டுபோகின்றனவென் றிப்படிப் பேரிரைச்சலிட்டுப்பேசினார்கள். அதைக்கேட்டுக் கம்புக்கிரீவனிந்த விரைச்ச லெங்கிருந் துண்டாகிறதென்று

சொல்வதற்கு வாய்திறந்தவுடனே கழியினின்று விடுபட்டுப் பூமிமேல்விழுந்தது. அப்போதங்கே யிருந்த புலாற்றின்பவர்களுடனேகொன்றுதின் ருர்கள். ஆகையாற்றனக்கிதம்பண்ணுகிறவர்கள் பேச்சை யசட்டைபண்ணலாகாது. மேலும் யாதொருகாரிய நேரிடுவதற்குமுன்னேதானே யாலோசிக்கிறவனும் வருகிறபோதே யாராய்கிறவனுமிவ்விருவருஞ் சுகமடைவார்களிதைவிட்டியாதொன்று வரத்தக்கதோ வதுவரட்டுமென்றியார்சொல்லுகிறனேவவன் வந்தபின்காப்போனென்னு மீனைப்போ ைசமடைவானெனச் சேவ லதெப்படியெனப்பெட்டைச்சிட்டு சொல்லுகிறது:

ஒருபெரியகுளத்தில் வருமுன்காப்பவனென்றும் வருங்காற் காப்பவனென்றும் வந்தபின்காப்பவனென்றும்-மூன்றுமீன்களநேக நாளாய் வாழ்ந்துகொண் டிருக்குநாளிலொருநாள் வலைகாரர்வந் திதிலே தண்ணீர் கொஞ்சமாயிருக்கிறதாகையா லிவந்திதிலிருக்கிற மீன்களையெல்லாம் பிடிப்போமென்று பேசிக்கொண்டதை வருமுன்காப்பவன்கேட்டுத் தன் சிநேகிதரிடத்திற்போய் நாமிவ்விடம்விட்டுச் சீக்கிரமாகப்புறப்படவேண்டு மினியிங்கே யொருநிமிஷநேரமு மிருக்கலாகாதென, இதைக்கேட்டு வருங்காற்காப்பவன்சொல்லுகிறது: நமக்கு விபத்துவரும்போதுபார்த்துக்கொள்ளுவோம், காரியநேரிடும்போததற்குத் தக்கதாகப் புத்தியுண்டாகுமெனப் பிறகு வந்தபின்காப்பவன் றன்னிடத்தை விட்டுவிடுகிறதுதான்மூர்க்கத்தனம். ஏனென்றால்-எதுவரத்தக்கதோ வதுவரவேவரும்-யாதொன்றுவரத்தகாததோ - அதைநாம் வருந்தியழைத்தாலும்வராது. ஆதலால் - நான் வரமாட்டேனென்

றுசொல்லி யந்தக்குளத்திலேயேயிருந்தது. பிறகு வருமுன்காப்பவன் வேறிடத்திற்குப் போய்விட்டது. மறுநாளுதயத்திற் செம்படவர்வந்து வலையெறிந்து மீன்களைப்பிடித்தார்க ளதில் வருங்காற்காப்பவ னகப்பட்டுச் செத்தாற்போற் பாசாங்குபண்ணிக்கொண்டிருந்தது. அதைப்பார்த் திதுசெத்ததென்றெண்ணிக்கொண்டு செம்படவனதைக் கரைமேற்போட்டுவைத்தா னிதற்குள்ளேயது வவன்கண்ணுக்குத்தப்பித் தண்ணீரிற்புகுந் தொளித்துக்கொண்டது. பிறகு வந்தபின்காப்பவன் வலைக்குளகப்பட் டிப்போ தென்னசெய்யலாமென் றங்கு மிங்குமோட வதைச் செம்படவன்கண்டு தடியா லடித்துக் கொன்றான். மற்றிரண்டுஞ்சுகமடைந்தன. ஆகையா லெதையு மாலோசித்துச் செய்யவேண்டுமென்று சொல்லிப்பிறகு புருஷின் சொற்படி யங்கேதானேமுட்டையிட்டது. அப்போது சமுத்திரமதன் வல்லமையை யறியாயன் முட்டைகளையடித்துக் கொண்டுபோயிற்று. சிட்டு-அதைப்பார்த்துவெகுதுக்கமாய்ச் சேவலுடனே சொல்லுகிறது: சுவாமி தங்களுக்குப்பெரியசங்கடம்வந்தது. ஏனென்றால்-முட் டைகளைச் சமுத்திரங் கொண்டுபோயிற்று. இப்போ தென்னசெய்யலாமெனச் சேவல்-நீபயப்படாதே, நான் முட்டையைக்கொண்டுவருவே னென்றிராணியைப்பாரென்றுசொல்லி-எல்லாப்பறவைகளையுங் கூட்டமாய்க் கூட்டிக்கொண்டு கடற்பக்ஷிகளைச் சரணமடைந்தது. கடற்பக்ஷிக ளதின்மேலிரக்கம்வைத் தப்பறவை மிகவும்வருத்தப்படுகிற தாகையா லிதன்முட்டைகளைக் கொடுக்கவேண்டுமெனச் சமுத்திரத்தைப் பரிசோதித்துப்பார்த் தந்தமுட்டைகளை யார்-அ

திகசீக்கிரமாய்க் கொண்டுவருமோவென்று பேர
ட்டியாய்த்தேடி முட்டைகளைக்கண்டு கொண்டு
வந்துகொடுத்தது. ஆகையாற் சத்துருக்களுடை
ய பராக்கிரமமறியாமற் பகைத்துக்கொள்ளலா
காது. ஆனாலது வந்தச்சிங்கத்திற் ககங்காரத்தி
னாற் றெரியவில்லையெனக்கேட்டுச் சஞ்சீவகன் ற
மனகனைப்பார்த்து நல்லது-அந்தச்சிங்கத்தின்
சண்டைக்குறிப் பெப்படியிருக்குஞ் சொல்லென
த் தமனகன்: எப்போதவன் காதுகளை நெறித்து
க்கொண்டுவாலைத்தூக்குவானோ வப்போதுகொ
ல்லநினைத்தானென் றறியவேண்டும். அக்காலத்
திலப்படியே நீயுமவனுக்குமுன்னே யிருக்கவே
ண்டுஞ் சுத்தவீரனாகியவுனக்குத்தெரியாதா? எ
ல்லாந்தெரிந்தவர்கட்குச் சொல்வானேனென
ச்சொல்லிவிட்டுத் தமனகன் மறுபடிகரடகனிட
த்திற்குப்போயிற்று. அப்போது கரடகன் - என்
னமாச்சுது? சொல்லெனத் தமனகன் காரியமுடி
ந்தது. இருவருடையசிநேகத்தின்வாயின் மண்வி
ழுந்தது. இப்போது நான் சிங்கத்தின்கோபக்கு
றி யிப்படியிருக்குமென்று சஞ்சீவகனுக்குச்சொ
ன்னபடியே செய்விக்கிறேனென்று பிங்கலனிட
த்திற்குப்போ யப்படியேயதைச் செய்வித்தது.
பிறகுசஞ்சீவகன் சிங்கமிருக்குமிடத்துக்கு வந்து
பார்க்கும்போது முன்றனக்குத் தமனகன் சொ
ன்னபடியேயிருக்கக்கண்டு மிகவும்விசனமடைந்
து பராக்கிரமத்தினாலேயே பிராணனை விடவே
ண்டுமென்று நிச்சயித்து-யுத்தத்துக்காரம்பிக்க
வே யிரண்டுக்கும்பெரியசண்டைவிளைந்தது. கர
டகனதைப்பார்த்துத்தமனகா, துஷ்டா, உன்சே
ர்க்கையால் - ராசாவுக்குஞ்சிநேகனுக்குஞ் சண்
டை யுண்டாயிற்று. ராசநீதியில் - சாம-தான-

பேத-தண்டமென்னு நான் குபாயங்களிருக்கின்றன. அவைகளிற் சாமமென்னுமுபாயமுக்கியமானது. ஏனென்றால்-அதனுற் காரியசித்தியுண்டாயிருப்போல் மற்றவைகளாலுண்டாகாது. பகையிருந்தாலுஞ் சாமவுபாயத்தினலேயேபோ மிப்படியிருக்கையில் - நீராசாவைப்பெரியபொல்லாப்பில் விழுவித்தாய. ராசாக்களிற்சில ரீனர்களுடையபுத்தியைக்கேட்டுச் சங்கடமடைகிறார்கள். ஆகையாற் குணவந்தர்களுடைய கூட்டுறவு ராசாக்களுக்கிருக்கவேண்டும். கபடியாயிருக்கிறபிரதானி புத்திசாலியானாலும்-அவனொருபோதும் ராசாவண்டை யிருக்கலாகாது. மற்றுந் தாங்களே சம்பத்தடையவேண்டுமென்று நினைத்து ராசாவினிடத்தில் வேறொருவன் சேரலாகாதென்றிச்சிக்கிறவனும் - ராசாவுக்குபயோகியாகான். ஏனென்றால்-பலபெயர் சமர்த்தர்கள் - ராசாவினிடத்திலிருந்தால்-ராசா பிரகாசிப்பான். ஆகைக்காரனுந் துஷ்டனுமாகிய விவர்களுடையகூட்டுறவால் - ராசா பிரகாசிக்கமாட்டான். தங்களைவிட ராசாவிடத்தில் வேறொருவ னிருக்கலாகாதென்றபேட்சிக்கிறானோ-அவனை ராசாவுக்குச்சத்துருவென்று நினைக்கவேண்டும். அப்படியேநீயிந்தத்தீங்குவிளைத்தாய். எசமானுடைய தயைகிடைத்தாற் சேவகர்கள் கர்வியாமல் மிகவுமடக்கமாயிருக்கவேண்டும். நீயதைவிட்டு விபரீதமாகநடக்கிறாய். பிதாவைப்போலிருப்பான் புத்திரனென்பதை நீபொய்யாக்கினை யிப்போ துனக்கு நானென்னசொல்வேன். கொக்குக் குரங்குக்குபதேசம்பண்ணி யெப்படியிறந்ததோ வப்படி யுன்னாலே நான்மரணமடைவேனென்றெனக்குத் தோற்றுகிறதென் றிப்படிக் கரடகன் சொன்ன

தைக்கேட்டுத் தமனகனதெப்படிச்சொல்லெனக்
கரடகன்சொல்லுகிறது:

ஒருநாள் குளிரால்வருத்தப்படுகிற குரங்குக்
கூட்ட மின்மினிப்பூச்சிகளைப்பார்த் திதுநெருப்பெ
ன்றுநினைத்துக் குளிர்காய்வதற்காக வதனருகே
போயிற்று. அப்போதங்கே யொருமரத்தின்மே
லிருந்த சுமுகனென்னுமொருபறவை யிதைப்பா
ர்த்துக் குரங்கினருகேவந்து-இது மின்மினிப்பூச்
சிநெருப்பன்றென்று சொன்னவுடனே யந்தக்
குரங்குக்கூட்டத்தி லொன்றுகோபமா யந்தப்ப
க்ஷியைப்பிடித் தெனக்குநீ புத்திசொல்லுகிறவ
னுவென்று கல்லிலறைந்துகொன்றது. ஆகையா
ற்றுஷ்டர்களுக் குபதேசம்பண்ணலாகாதென்று
கரடகன்சொல்லத் தமனக னொன்றும்பேசாமன்
மௌநமாயிருந்து மனதின்மிகவும் விசனப்பட்
டு நானிந்தப்பாதகம் பண்ணினேனென்றுசொ
ல்லமறுபடியுங்கரடகன்சொல்லுகிறது. அடாதம
னகா-இப்படிக்கொத்த நடத்தையினலே துஷ்
டபுத்தியைப்போல நீயு நாசமடைவாயென-அ
ப்போது தமனகன்-துஷ்டபுத்தி யெப்படிக்கெ
ட்டான்?சொல்லெனக்கரடகன் சொல்லத்தொட
ங்கினது:

துஷ்டபுத்திசுபுத்தியென் றிரண்டுசெட்டிப்பிள்
ளைகள் பணஞ்சம்பாதிக்கிறதற்காகத் தேசாந்தர
ம்போனார்க ளவ்விடத்திற்சுபுத்திக்குப்பூமியிலொ
ருபணப்புதைய லகப்பட்டது. அதைச் சிநேகத்
தினலே துஷ்டபுத்தியுடனேசொல்லத் துஷ்டபு
த்தி யந்தத்திரவியத்தையிங்கேயேபுதைத்துவை
த்துவிட்டுக் கொஞ்சம்பண மெடுத்துக்கொண்டு
போவோமெனச் சுபுத்திசிநேகத்தின லதற்குச்
சம்மதித்துப் பிறகதிற் கொஞ்சம்பண மெடுத்து

க்கொண்டு மற்றைப்பணத்தை யொருமரத்தடியிற்பள்ளந்தோண்டி யதிலேபுதைத்துவைத்துப்பின்பு வீட்டுக்குப்போய்ப்பழையபடியே சிநேகமாயிருக்கையி லொருநாள்- துஷ்டபுத்தி தனியேபோயந்தப்பொருளையெல்லா மெடுத்துக்கொண்டு வீட்டுக்குவந்துவிட்டான். பிறகுசிலநாட்கழித்துத் துஷ்டபுத்தி சுபுத்தியைப்பார்த்து-அந்தநம்முடைய திரவியத்தைக் கொண்டுவருவோமெனப் பின்பிருவரும்போ யந்தவிடத்திற்பார்க்குமளவி லங்கொன்றுமில்லாமையாற் றுஷ்டபுத்தி மிகவும்வருத்தத்தோடு சுபுத்தியைப்பார்த்திங்கிருந்தபணத்தை நீயே கொண்டுபோனாய். மேலுங் கபடமாய்வருத்தப்படுகிறுயென்றுசொல்லிக்கலகப்பட் டிதைராசாவுக்கறிவித்தான். பிறகுராசாநியாயாதிபதியை யழைப்பித்திதைப்பஞ்சாயத்திற் றீர்க்கவேண்டுமெனக் கட்டளையிட வவனைந்துநாளைக்குள்ளே தீர்த்துப்போடுகிறேனென்று ராசாவின்முன்னேகெடுவைத்துக்கொண்டுவந்து பஞ்சாயத்துக்காரம்பித்தான். அப்போது துஷ்டபுத்தியெனக்குச்சாக்ஷியிருக்கிறதந்தச்சாக்ஷியை யிப்போதே கேட்கலாமெனப் பஞ்சாயத்தா ருன்சாக்ஷியைக் கொண்டுவாவெனப்பின்பு துஷ்டபுத்திவீட்டுக்குப்போய்த் தன்தகப்பனுடனே சொல்லுகிறுன்: அப்பா வுன்னுடையவொருபேச்சா லெனக்குப் பதினுயிரம் வராகன்வரைக்குங் கிடைக்குமென-அப்போது கிழவனெப்படிக்கிடைக்கும்? சொல்லெனத்துஷ்டபுத்தி: நீர்மரப்பொந்தி லிராத்திரிக்குப்போயுட்கார்ந்திருக்கவேண்டு மங்கே நியாயாதிபதி முதலானோர்வந் தங்கிருந்தபணத்தை யார் கொண்டுபோனார்களென்னும்போது நீர் சுபுத்திகொண்டு

போறுனென்று லென்காரியமாகுமென - இதை
க்கேட்டுப் பிதாச்சொல்லுகிறான்: பொல்லாங்கு
நேரிடுகிறகாரியத்தைப்பண்ணிச் சுகமடையவே
ண்டுமென் றிச்சிக்கிறதுகொக்கைப்போல மூட
த்தனமாயிருக்கிறதெனத் துஷ்டபுத்தியதெப்ப
டியெனப் பிதாச்சொல்லுகிறான்:

தான் பொரிக்கிற குஞ்சுகளையெல்லா மொரு
பாம்புதின்னப் பறிகொடுத்துக்கொண்டுவருகிற
வொருமூடக்கொக்கு - அப்போதுபொரித்ததன்
குஞ்சுகளைக் காப்பாற்றுகிறதைக்குறித் தென்ன
செய்யலாமென்று பெண்கொக்கோடுகூட வேரி
கரையிலுட்கார்ந் தாலோசித்துக்கொண் டிருக்
கையி லக்கொக்கின்சிநேகிதனுகிய குளிரனென்
னும்பெயரையுடைய நண்டானது கொக்குகளை
ப்பார்த் தின்றைக்கேனீங்கள் வியாகுலமாயிருக்
கிறீர்களென-அவர்க டங்கள் விர்த்தாந்தமெல்
லாஞ்சொல்லக்குளிரனதைக்கேட்டு-ஆண்கொக்
கைப்பார்த்து நல்ல துனக்குப் பாம்பைக் கொல்
லுகிறவுபாயமொன்று சொல்லுகிறே னென்னெ
ன்றால்-கீரிப்பிள்ளையின்வளைமுதற்கொண்டு பாம்
பிருக்குமிடமட்டு மீன்களை யிறைத்துவைத்தாற்
காரியசித்தியாகுமென்றது.பிறகுகொக்கப்படியே
செய்யக் கீரிப்பிள்ளைத் தன்வளையினின்றுபுறப்ப
ட்டு மீன்களைத் தின்றுகொண்டேபோய்ப் பாம்
பையுங் கடித்தெறிந்துவிட்டுக் கொக்கின்குஞ்சு
களையுஞ் சாப்பிட்டது. ஆகையா லிப்படிப்பட்ட
வாலோசனைபண்ணலாகாதெனத் துஷ்டபுத்திபி
தாச்சொன்னதைக்கேளாம லவனை வலுவி லிழு
த்துக்கொண்டுவந்து மரப்பொந்தி லுட்காருவித்
து விடியற்காலத்தி னியாயாதிபதி முதலாகிய
பேரையுஞ் சுபுத்திமுதலானோரையு மவ்விடத்து

க்கிட்டுக்கொண்டுபோய்ச் சாக்ஷி யிந்தமரத்தை
க்கேளுங்களென்றான். அப்போ தந்தமரத்திலிரு
ந் திங்கிருந்தபணமுழுதுஞ் சுபுத்தியேகொண்டு
போனானென் றொருசப்தம் புறப்பட்டது. அப்
போது சுபுத்தியிதென்னமோ மோசமாயிருக்கி
றது, இங்கேயொருபிராணியில்லாமற் றொனியெ
ங்கேயிருந்து புறப்பட்டது? இதுதெய்வீகமாயி
ருந்தான் மெய்யல்லோ சொல்லவேண்டுமென்
றிப்படித் தனக்குள்ளெண்ணமிட்டுக்கொண்டந்
தமரத்தின்மே லேறிச்சோதிக்கையி லதிலொரு
பொந்துகாணப்பட்டது. உடனே யிங்கேகிருத்தி
ரம மிருக்குமென்றெண்ணி யங்கே நெருப்பைமூ
ட்டிப் பற்றுவித்தான். பின்புள்ளேயிருந்தகிழவ
ன் பாதிவேகிறமட்டும் பல்லைக்கடித்துக்கொண்
டிருந்து பொறுக்கப்போகாம லலறிக்கொண்டு
வெளியேவந்துவிழுந்தான். அப்போ தங்கிருந்
தோரெல்லோருமிதென்னவிதென்னவெனக் கே
ட்கக் கிழவன்—என்பிள்ளை துஷ்டபுத்தி கபடத்தி
ன லென்னைப்பலாத்காரமாகக்கொண்டுவந் திங்
கேவைத்தானென்றுசொல்லி யிறந்துபோனா னி
யாயாதிபதி யிதைப்பார்த்திராசாவுக்குவிண்ண
ப்பம்பண்ணப் பிறகு துஷ்டபுத்திவாயினாலேயே
ராசா வெல்லா மறிந்துகொண் டவனைக் கழுவி
லேற்றினானென்றுசொல்லிப் பின்னுங்கரடகன்—
தமனகனைப்பார்த்துப் பாம்பை வெகுநாள்வளர்
த்தாலு மதுவெப்படியும் வளர்த்தவனையுங்கடிக்
கும், ஆகையாலெனக் குன்னிடத்திற் பயந்தோ
ன்றுகிற தினிமேலுன்னிடத்திற் றேவதத்தனைப்
போ னடந்துகொள்ள வேண்டுமென — அதைக்
கேட்டுத்தமனகன் றேவதத்த னெப்படி நடந்
துகொண்டான்? சொல்லெனக் கரடகன்சொல்
லுகிறது:

ஒருபட்டணத்திற் றேவதத்தனென்று மொருசாவகாரி தான்றிரவியவீனனாய்ப் போனதினுன் மறுபடி திரவியஞ்சம்பாதிக்க நினைந்து தேசாந்தரம்போகப் புறப்படும்போது தன்வசத்திலிருந்த வாயிரமிருப்புக்கம்பிகளை யவ்விடத்திருந்த தன்சிநேகிதனிடத்தில் வைத்துவிட்டுப்போனான். போனவிடத்திற் றிரவியசம்பாத்தியத்தைக்குறித் தநேகவுபாயம்பண்ணியும் பண மகப்படாமையான் மீண்டும் வீட்டுக்குவந்து தன்னுடைய விருப்புக்கம்பிகளைக் கேட்டான். வைத்துக்கொண்ட சிநேகிதன் மிகுந்ததுராசையினு லிருப்புக்கம்பிகளை யெலிகடித்துவிட்டன வென்றான். இவனிந்தவபூர்வத்தைக்கேட்டு நல்லதிருக்கட்டுமென்றுசொல்லி வீட்டுக்குப்போனான். பிறகொருநாள் - சிநேகிதன்பிள்ளையை விளையாடுகிறதற்காக வவனிடத்திலிருந் தெடுத்துக்கொண்டுபோய் மற்றொருவீட்டிலொளித்துவைத்துப் பின்புசிநேகிதனிடத்தில்வந் துட்கார்ந்தான். அவனுன்னிடத்திலிருந்த வென்பிள்ளையெங்கே யெனச்சாவகாரி - உன்பிள்ளையைப்பறவை தூக்கிக்கொண்டுபோயிற்றென்றானிதையவன்கேட்டு மிகவுங்கிலேசப்பட் டவனையிழுத்துக்கொண் டதிகாரியண்டைபோ யிந்தத்துஷ்ட னென்பிள்ளையைக்கொண்டுபோ யொளித்துவைத்துவிட்டுப்பிள்ளையைப் பக்ஷியெடுத்துக்கொண்டு போயிற்றென்கிறானையா லென்பிள்ளையை யெனக்குக்கொடுப்பிக்கவேண்டுமென - அதிகாரி யிதைக்கேட்டுச்சாவகாரியையழைத் திவன்பிள்ளையெங்கேயிருக்கிறது சொல்லென-அவ னிவன்பிள்ளையைப் பக்ஷிகொண்டுபோயிற்றென - அதிகாரியிதைக்கேட்டுக்குலுங்கநகைத் திந்தவசம்பவ மிதுவரைக்கு

மூலகத்திலில்லை யப்படியிருக்க நீயெப்படி சொல்லுகிறாயென—அப்போதவனிதோ ராச்சரியமா? எப்படி யிரும்புக்கம்பிகளை எலிகடின்றனவோ வப்படியே யிதுவுஞ்சம்பவித்ததாண்டவனேயென விதைக்கேட்டு நியாயாதிபதி முன்னடந்தவைகளை விசாரித்தறிந்துகொண் டவனுடையவிரும்புக்கம்பிகளை நீ கொண்டுவந்துகொடுத்தா லவனுன் பிள்ளையைக்கொண்டுவந்து கொடுப்பானென்றவுடனே யவ்விருவருமப்படியே செய்துதங்கள் வீட்டுக்குப்போனார்களென்றிப்படிப்பட்ட கதைகளைச்சொல்லிப் பின்னுந் தமனகனுக்குக் கரடகன் சொல்லுகிறது: சொன்னபொருளைத் தெரிந்துகொள்ளாதவன் கல்லுக்குச்சமானம். அவனுக்குபதேசித்துப் பலனில்லையென்று சொல்லிக் கரடகதமனக நரிகளிரண்டும் பிங்கலனிடத்திற்குப்போம்போது சிங்கஞ் சஞ்சீவகனோடேகூடச் சண்டைபண்ணி யதைக்கொன்றுவிட்டு—இதெல்லாஞ்சம்பவித்தவகையோசித்துவிசனமாயுட்கார்ந்திருந்தது. இதைக்கண்டு தமனகன்ராசாவைப்பார்த்துச் சுவாமிதாங்கள் சத்துருவைக்கொன்று துக்கப்படுகிறீர்களிதுவனியாயமல்லவோ? அரசின் சத்துருவையும் – இராசாவின் சத்துருவையுங் கொல்லவேண்டுமென்று சாஸ்திரமிருக்கிறதென—அரசன்றமனகனைச்சினந்து கபடுள்ள துஷ்டா வனக்கிஷ்டமில்லாதவனை ராசசத்துருவென்று சொல்லலாமா? அவனையழிக்கவென்னிடத்திலுமவனிடத்திலுமில்லாதவைநம்புவித்து—எங்களுக்குள்ளே விரோதமுஞ் சண்டையுமெழுப்பினாய். உன் துர்ப்போதனையினாற்குற்றமில்லாதவோர் நல்ல சிநேகிதனை யநீதமாய்க்கொன்றேன். இவ்வண்ணமே சூது பொய் கபடுமுதலியது

ர்க்குணமுள்ள மந்திரிகள் ராசாக்களை யெய்த்து வெகுவநீத தின்மைகளை நடத்துகிறார்கள். அவர்கள்தானரசுக்கு மரசர்களுக்கும் பொல்லாதசத்துருக்களாயிருக்கிறார்கள். அப்படி நீயே யெனக்குக் கெட்டசத்துருவாகி யென்னை மோசஞ்செய்தென்பாக்கியத்தைக்கெடுத்தாய். ஆகையாலுன்னைத் தண்டனையில்லாமல் விடலாகாதென்று நரியின்மேற் பாய்ந்ததைக் கொன்று பக்ஷித்தது. பிறகுசிங்கமந்தக்காட்டின் முன்போலத்தன்ராச்சியத்தை யநுபவித்துக்கொண்டு சுகமாயிருந்தது.

முதலாவது-மித்திரபேதம்-அல்லது-
நட்புப்பிரிவு. முற்றிற்று.

---

# இரண்டாவது

## சுகிர்ல்லாபதந்திரம்,

### அல்லது - நட்புப்பேறு.

---

புத்திசாலிகளாயிருக்கிற சிநேகிதர்கள்- திரவியமில்லாதிருந்தாலும் வேறேசாதனங்களில்லாவிட்டாலும் -காகமும்- எலியும்-ஆமையும்-மானும்-நட்பினு லொன்றையொன்று காப்பாற்றினாற்போல- ஒருவர்க்கொருவ ருதவுவார்களென ச் சோமசன்மாசொல்ல-ராசகுமாரர்களதெப்படியெனச் சொல்லத்தொடங்கினான்.

கோதாவரிக்கரையிலிருக்கிறவொருபெரியவன்னிமரத்தில் - லகுபதன னென்னுங் காகமிருந்துகொண்டிருக்கையி லொருநாள் விடியற்காலத்தி

லங்கே வீமனைப்போல மிகவும் பயங்கரமா யொரு வேடன்வந்தான். லகுபதன னவனைப்பார்த்துப் பயப்பட்டிந்தத்துராத்மா வென்னபண்ணுவானோ தெரியவில்லை. ஆகையாலிதைச் சோதிக்கவேண்டுமென்றினை தேடுகிற யத்தனத்தைவிட்டிருக்க—இதற்குள்ளே—அவ்வேடன் வலையைவிரித்துப் பலவகைப்பட்ட தானியத்தைத் தெளித்தங்கே யோர்செடிமறைவிற் பதுங்கிக்கொண்டிருந்தான். அதன்பிறகு தன்பரிவாரத்தோ டந்த மரத்தில்வந்திறங்கின சித்திரக் கிரீவனென்னும் புறவரசங்கே யிறைத்திருக்குந் தானியத்தைப் பார்த்துத் தன்பரிவாரப் புறக்களுடனே சொல்லுகிறது: இந்த நிர்மானுஷியமான காட்டிற் றானிய மெப்படிவரும்? யாராலுங் கொண்டுவந்துபோட்டிருக்கவேண்டு மிது நமக்குத்தெரிந்தாலல்லாம லிதைப்பக்ஷிக்கலாகாது. ஏனென்றால்—ஒருபிராமணன் பொன்காப்புக் காசைப்பட்டுப் புலியினா லெப்படி மரணமடைந்தானோ வப்படிக்கிது வேதோவொரு விபரீதமாகத் தோற்றுகிறதெனப் புறக்களதைக்கேட்டதெப்படிமஹாராஜாவேயெனச் சித்திரக்கிரீவன் சொல்லுகிறது:—

நான்றென்காட்டின் மேய்ந்துகொண் டிருக்கையிற் பார்த்தேனதைக்கேளுங்கள். ஒருகிழப்புலியபலவீனத்தா லாகாரஞ்சம்பாதிக்கக் கூடாமலோ ரோரிகரையி னீராடிக்கையிற் றர்ப்பை வைத்துக்கொண்டுட்கார்ந்திருக்கையி லொருபிராமணனந்தவழியில்வந்தான். புலி யவனைப்பார்த்து — ஓ பிராமணா—இந்தப் பொன்காப்புத் தருகிறேன்வாவென — இதைக்கேட்டப்பிராமண னந்தப்புலியைப்பார்த்தாலோசிக்கிறான். எப்படியென்றா லிந்தக்காப்பு நமக்கு வலியக்கிடைக்கிறது.

ஆனல் - மரணத்துக்கிடமாகிய புலியின்கிட்டப் போகலாகாதாகையா லிந்தக்காப்பிலாசைவைக் கலாகாதென்போமானல் - மரணத்துக்கு நாலண்டையும்வழி. ஆகையாலிதைக்குறித்துப் பிரயத்தனம்- அவசியம்பண்ணவேண்டுமென்றுதன்றுராசைக்கேற்பத் தனக்குள்ளே நிச்சயித்துக்கொண்டு சொல்லுகிறன்: ஐயாபுலியாரே காப்பெங்கேயிருக்கிறதெனப் புலி கையில்வைத்துக்கொண்டிதோபாரும் பிராமணோத்தமா வெனக்காண்பித்தது. பின்பு பிராமணன்-உன்னிடத்திலெனக்கெப்படி நம்பிக்கையெனப்புலி: நான்வைகறையின்மூழ்கி நித்தியதானம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். நானே நகமும்பல்லும்போன கிழவனுயிருக்கிறே னிப்போது மென்னிடத்தினம்பிக்கையில்லையா? வேட்டல்-ஓதல்-கொடுத்தல் -தபம்-சத்தியம்-உறுதி-பொறுமை- ஆசையின்மை- என்னு மிவ்வெட்டுத் தருமங்களையு நானறிந்திருக்கிறதினுலிந்த வபூர்வவஸ்துவையார்க்காகிலுங்கொடுக்கவிச்சிக்கிறே னிதனு லென்னிடத்தினற்குணமிருக்கிறதென்று மெவ்வளவானுலுந் துர்க்குணமிருக்கமாட்டாதென்று மறியவில்லையாவென்னவென - அப்போது பிராமணன்-இது மெய்தான். ஆனல் புலி மனிதரையடித்துத் தின்னுகிறதென்று மிகவும் லோகாபவாத மிருக்கிறதெனப் புலி: நான்றருமசாஸ்திரமு மறிந்திருக்கிறேன் றன்பிராணன் றனக்கெப்படி தித்திப்போ அப்படியெல்லார்க்குமிருக்குமென்றறிந்து சாதுக்கள் பிராணிகளிடத்திற் றயையா யிருக்கிறார்கள். தன்னைப்போலச் சுகதுக்கங்களைப் பிறரிடத்தினினைக்கிறார்கள். நீ மிகவுந்தரித்திரன். ஆகையாலுனக்குக் கொடுக்கப்பிரயத்தனம்பண்ணு

கிறேன். சாஸ்திரமு மிப்படியே யிருக்கிறது. எ
ப்படியென்றால்-ஏழைக்கே கொடுக்கவேண்டும்.
செல்வமுள்ளவனுக்குக்கொடுக்கலாகாது. ஏனெ
ன்றால் - மருந்துநோயாளிக் கெப்படிக் குணங்
கொடுக்குமோ வப்படி நோயில்லாதவனுக்
காகுமா? ஆதலானீயிந்த வேரியிலே முழுகிவந்
து காப்பைவாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போ
வென்றவுடனே பிராமணன்- ஐயோ பிராமண
னுக்குப் பின்புத்தியாகையால் புலியின்பேச்சை
நம்பி ஸ்நானம்பண்ணுகிறதுக் கேரியி லிறங்கி
னவுடனே யுளையிற்புதைந்து காலைப் பிடுங்கிக்
கொண்டு வரக்கூடாமற்றிகைத்தான். புலியதை
ப்பார்த்துப் பிராமணுபயப்படாதே. நானுன்னை
ச் சேற்றினின்று மெடுக்கிறேன். சற்றிருவென்
று சொல்லிக்கொண்டு மெல்லெனப்போ யவனை
ப்பிடித்துக்கொண்டது. அப்போது பிராமண
னெண்ணுகிறான். என்னென்றால் துஷ்டர்கள்வே
தாத்தியயனம் பண்ணியிருந்தாலுந் தருமசாஸ்
திரம்படித்திருந்தாலு மவர்கள் வார்த்தையி ன
ம்பிக்கைவைக்கலாகாது. ஏனென்றால்எவன்சுபா
வமெப்படியோ-அதுவெப்போதுமிருப்பதுவழக்
கம். இப்படியிருக்கையி னம்முடையசாதிக்கியல்
பாயிருக்கிற பேராசையினு லிந்தத்துஷ்டனிடத்
தில் விசுவாசம்வைத்து மோசம்போனேனென்
றிப்படிப் பச்சாத்தாபப்பட்டுக்கொண்டிருக்கை
யி லந்தப்புலிகொன்றுதின்றது. ஆகையான்மிக
வு மாலோசனைபண்ணி யேதொன்றுசெய்யத்த
க்கதோ வதைச்செய்யவேண்டுமெப்படிச்செய்தா
ல் யாதொருதீங்குநேரிடாதென் றிப்படிச்சித்தி
ரக்கிரீவன் வார்த்தையைக்கேட்டு-ஒருபுறு-கர்வ
த்தோடு சொல்லுகிறது: இப்படி யாலோசித்தா

லோரிஷையு நமக்ககப்படாது. மேலும்-வெட்கப்படுகிறவன்-பொறுமையுள்ளவன் - சந்தோஷப்படாதவன்-குரோதமுள்ளவன்-தீராச் சந்தேகமுள்ளவன் - பிறர்பொருளாற்சீவிக்கிறவ னிவ்வாறு பெருந்துக்கத்தையே யனுபவிப்பார்களென- இதைக்கேட்டுப் புறுக்களெல்லாந் தானியத்தைத் தின்னும்பொருட்டுப் போய் நிலத்திறங்கி வலையிலகப்பட்டன. புறுவரசனதைப்பார்த்து - எல்லோரு மென்சொல்லைக் கேளாமற்போனர்களிப்போது நானொன்றியாயிருந்து பலனில்லையென்றுசொல்லி யதுவும் வலையில்வந் தகப்பட்டது. பிறகுவேடன் பக்ஷிகள் வலையிற்சிக்கிக்கொண்டதைப்பார்த் ததனிடத்திற்கு வரத்தொடங்கினன். அதைப்புறுக்கள்கண்டு சித்திரக்கிரீவனைப்பார்த்துச் சொல்லுகின்றன: நாங்க ளீசன்புத்தியைக்கேட் டுன்னையவமானம்பண்ணினே மதன் பலன் பிராப்தி யாயிற்றென: அப்போது சித்திரக்கிரீவன்-இப்போ திதைச்சொல்லிப் பயனென்ன? இதற்கோருபாயமிருக்கிறது. எல்லோரும்வலையோடுகூட வொருமிக்கப்பறந்து வேறிடத்திற்குப்போகவேண்டும். அப்படிச்செய்தாற்றன் பிராணனைக் காப்பாற்றலாமென விதைக்கேட்டவுடனே யெல்லாப்பறவைகளும் வலையோடுகூடச்சடிதியிற்பறந்துபோயின. அதைவேடன் றூரத்திலிருந்துபார்த் தாச்சரியப்பட்டுச்சொல்லுகிறான். என்னென்றல்-இவைகளொரேமனதாய் வலையைக்கொண்டுபோயின - ஆனலிவைகளிலொன்றுக்கொன்று சண்டைநேரிடும். அப்போதென் கையி லகப்படுமென நினைத்துக்கொண் டவைகளின்பின்னே யோடும்போது புறுக்கள் கண்ணுக்குமறைந்துபோய்விட்டன. பிறகவன் வருத்த

ப்பட்டுத் திரும்பிவந்துவிட்டான். இவ்வாச்சரியமெல்லாம் பார்த்திருந்த லகுபதனனென்னுங்காக மந்தப்புறுக்களின்பின்னேபோயிற்று.பிறகு கபோதராசா தன்கூட்டத்தைப்பார்த்துச் சொல்லுகிறது: கண்டகிநதிதீரத்திலிருக்குஞ் சித்திரவனத்தி லென்சிநேகிதனன விரணியகனென்னுமோ ரெலியரசனிருக்கிற னவன்பல்லினலேநம்முடைய வலையையறுப்பான். ஆகையாலங்கே நடவுங்களென விதைக்கேட் டப்படியே யெலியரசன்வளையண்டையிறங்கின. அப்போது-எதாவதாபத்து நேரிடுமென்பதைக்குறித்துத் தன் வளைக்கு நூறுவழிசெய்துகொண் டுள்ளேயிருந்த வெலியரசன் புறுக்களிறங்கின சப்தத்தைக்கேட்டுப்பயந் தடங்கியிருக்கையில்- சித்திரக்கிரீவன்: சிநேகிதா - இரணியகனேயெங்களோடேயேன் பேசவில்லையென விதைத் தன்சிநேகனுடையதீங்குரலென்றறிந்து சந்தோஷித்தோடேகூடச் சீக்கிரமாக வளையினின்றும்வந்து நான்புண்ணியவானகையாற் சித்திரக்கிரீவ னென்னு மித்திரனென்வீட்டுக்குவந்தா னிவ்வுலகத்தின் மனதொத்தமித்திரனேடு சம்பாஷிக்கிறதிலும் வேறேயானந்தமேதென் றுபசாரஞ்சொல்லிப் பிறகதனுடைய வவஸ்தையைப்பார்த்து மிகவுந்துக்கித்துச்சொல்லுகிறது: மித்திரா நீ யெல்லாரைக்காட்டிலுஞ் சமர்த்தனுமே யுனக்கிப்படிப்பட்டகாரியமெப்படி நேரிட்டதெனப் புறு: தேவசித்தத்தாலே எந்தக்காலத்திலெது நடக்குமோ வது நடக்கும். அதன்விதி வலிது. அதன்முன் யாருடையவுபாய நடக்கும்? கடல்பெருகிமேலிட்டா லதற்குக் கரையேதென் - இரணியகன்: இந்தப்பேச்சுமெய்யே. நூறு நாழிகை தூரத்திலிருந்துவஸ்துக்க

ஊத் தெரிந்துகொண்டுபோகிற நீ யின்றைக்கு வேடன்வலையைப்பாராமற் சிக்கிக்கொண்டையே யார். சந்திரசூரியர்களைக் கிராணம் பிடித்தலும் யானையும் பறவையும் பாம்புங் கட்டுப்படுதலும் புத்திசாலிகளுக்கு வறுமைவருதலுந் தெய்வத்தின்மகிமையேயல்லாமல் வேறல்லவென்றுசொல்லிச் சித்திரக்கிரீவன்கட்டுண்டிருக்கிற வலைக்கயிற்றை யறுக்கத் தொடங்கிற்று. அப்போது சித்திரக்கிரீவன்: மித்திரா முன்னே யென்பரிவாரத்தினுடைய கயிற்றையறு, பிறகென்பாசத்தைத் துணியெனக்கேட்டு - எலி: என்பல்லு மிகவுமெதுவானது. அதற்குப் பலமுங்கொஞ்சம். ஆகையா லித்தனைப் பெயருடையபந்தனைக ளெனக்கெப்படியறுபடும். ஆதலாலுன்றளையை யறுத்துப் பின்பென்சாமர்த்தியத்துக்குத் தக்கதாக வவர்களுடைய தளையையு மறுப்பேனெனச் சித்திரக்கிரீவன்: நல்லது. முன்னே யிவர்களுடைய பாசத்தையறுவென - இரணியகன் றன்னைக்காப்பாற்றிக்கொண்டு பிறகு தன்பரிவாரங்களைக் காப்பாற்றவேண்டும். ஏனென்றால்-அறம்பொருளின்பம் வீடாகியவிவைகளுக்குப் பிராணன் முக்கியசாதனமாம். ஆகையாலதைக் காப்பாற்றின லெல்லாவற்றையுங்காப்பாற்றினப்போ லாகிறதெனச் சித்திரக்கிரீவன்:இந்தநீதிசரிதான். ஆனாலிப்படிப்பட்ட வேதனையினின்றும் பாலனம்பண்ணுகிறதுக்கல்லோ வென்னையிவர்க ளிராசாவாக நினைக்கிறார்களாகையா லென்பிராணனிடத்திலிச்சையைவிட் டிவர்களைப் பிழைப்பியென- அதைக்கேட் டெலிசொல்லுகிறது. நீபரமசாது, அடுத்தவர்களை யாதரிக்கிறவனாயிருக்கிறாய். எசமானனிடத்தில் விசுவாசமாயிருக்கிற சேவகனு

ம-ய்சவகனிடத்திற் பிரீதியாயிருக்கிறமவசமாண
ணுஞ் சுகமடைவார்களென்றுசொல்லி யெல்லா
வற்றின்பாசங்களையுமறுத்துப் பின்பு சித்திரக்கி
ரீவனுடைய கட்டைச்சேதித்தது. பிறகொன்று
க்கொன்று தழுவிக்கொண்டு பிரியவார்த்தைகள்
சொல்லினபிறகு சித்திரக்கிரீவன் பரிவாரத்தோ
டுகூடத் தன்னிடத்திற்குப் போனது. லகுபதன
னென்னுங்காக மிவையெல்லாம்பார்த் தாச்சரி
யப்பட் டிரணியகனைப்பார்த்துச் சொல்லுகிற
து:நீபாக்கியவானாயிருக்கிறாய். ஆகையா னுனு
முன்சிநேகத்தை விரும்புகிறேன். ஆனால்-நீ த
யைசெய் தெனக்குச் சிநேகனாகவேண்டுமென-
அப்போது-இரணியகனீயாரெனக்காகம்-நான்
லகுபதனனென்கிற காக்கையென- அதைக்கேட்
டெலி; ஆனாலுனக்குமெனக்கும் வெகுதூரம். உ
லகத்திற் சமானஸ்தர்களுக்கே சிநேகமுண்டாகி
றது. நானுனக்கிரை நீயென்னைத்தின்கிறவனிப்
படியிருக்கையி லிதெப்படியாகும்? அது-ஆபத்து
க்கே முகாந்தரமாம். நரிசிநேகத்தினால்-ஒருமா
ன் வலையிலகப்பட்டதுபோல வுன்னா லெனக்குப்
பொல்லாங்கு நேரிடுமென-லகுபதனனதைக்கே
ட்டுமானெப்படி வலையிற்சிக்கிக்கொண்டதென-
எலிசொல்லத்தொடங்கிற்று:

மகததேசத்திற் சண்பகவனத்தின் மானுங்கா
கமு மொன்றுக்கொன்று நட்பாயிருந்தது. அப்ப
டியிருக்கையி லந்தமான்மனசின்படி புல்லு முத
லானவைகளை மேய்ந்து கொழுத் திருக்கிறதை
யொருநரிபார்த்துத் தனக்குள்ளே யாலோசிக்
கிறது: இவ னமக் கசாத்தியமாயிருக்கிறான். ஆ
கையா லிவனை வஞ்சனையாற்கொல்லவேண்டுமெ
ன்றிப்படி நிச்சயித் ததன்சமீபத்திற்போய்ச் சி

நேகிதா சுகமாவென-அதைக்கேட்டுமான்:நீயா ரென நரி: நான் க்ஷுத்திரபுத்தியென்கிறநரி யிந் தக்காட்டில் யாருமற்றபாவியா யொருவனுகத் திரிந்துகொண்டிருந்தே னின்றைக் குன்னைப்பா ர்த்து மிகுந்த சந்தோஷத்தையடைந்தே னிப் போதுனக்கு வேலைசெய்துகொண் டுன்னிடத்தி லிருக்க விச்சிக்கிறேனென-இதைக்கேட்டுமான்: நல்லதென்றது. பிறகு பொழுதுபோனவுடனே யிரண்டுஞ் சண்பகமரத்தின் கீழேவந்தன. அம் மரத்தின்மேல் வாசம்பண்ணிக்கொண்டிருக்கிற மானின்சிநேகிதனுகிய சுபுத்தியென்னுங்காக மி வ்விரண்டையும்பார்த்து மானைக் கேட்கிறது:ஓ மித்திரா வுன்னண்டையிலிருக்கிறவனுரென-மா ன்-இந்தச்சம்புக னென்னுடனே சிநேகித்திருப் பே னென்கிருனென-அப்போது காகம்:மித்திர னே சடிதியில்வந்த வழக்கமில்லாதவனை நம்ப லாகாது.ஒருவன்குலமு நடத்தையுந் தெரியாம லவனுக் கிடங்கொடுக்கலாகாது.கொடுத்தாலொ ருபூனைக்குச் சரற்கவ னென்னுங்கழு கிடங்கொ டுத்திறந்தாற்போ னேரிடுமென- அதைக்கேட்டு மான்:சரற்கவ னெப்படிச்செத்தானெனக் காக ஞ்சொல்லுகிறது:

பாகீரதிதீரத்திற் றிரிகூடமென்னுமலையி லொ ருமுதிய வித்திமரத்தின் பொந்தில் வாசம்பண் ணிக்கொண்டிருக்கிற நகமுங்கண்ணுமில்லாதச ரற்கவனென்னு மொருகிழக் கழுகானது மற்றை ப்பக்ஷிகள்-தன்னிடத்தி லிரக்கம்வைத்துத் தங்க ளாகாரத்திற் கொஞ்சங்கொஞ்ச நெருக்கிக்கொ டுக்கத் தின்றுகொண்டு சீவித்திருக்கையி லொ ருநா ணெடுஞ்செவியனென்னும் பூனை பறவைக ளுடைய குஞ்சுகளைத்தின்னவேண்டி யந்தமரத்

தின்கிறேவர வதைக்குஞ்சுகள்பார்த்துப்பயந்து பெருங் கூச்சலிட்டன. கழுகதைக்கேட்டு நீங்க ளேன்பயப்படுகிறீர்க ளிங்கேயார்வந்தானென- இதற்குள்ளே பூனை சரற்கவனைப்பார்த்து நான்செத்தேனெனப் பயப்பட்டுடனேமனதிற்றை ரியம்பண்ணிக்கொண்டு - இந்தச் சத்துருவைத் தப்பித்துக்கொண் டோடுகிறதற்கு நமக்குச்சக் தியில்லை. ஆகையா லிவன்சமீபத்திற்போகவேண் டும். பின்னெதுவுண்டாகுமோ வதுவுண்டாக ட்டுமென் றிப்படிநிச்சயித் தந்தக் கழுகின்கிட் டேபோய்ச் சொல்லுகிறது: சமர்த்தனே யுனக் கு வந்தனம்பண் ணுகிறேனெனக்கழுகதைக்கே ட்டுநீயாரென-அப்போது பூனை-நெடுஞ்செவிய னென்னும்பூனையெனப் பிண்டி-சரற்சவன்: சீக்கிரமா யிவ்விடம்விட்டோடிப்போ வில்லாவிட் டாற்சாவாயெனப் பூனை: நானென்விர்த்தாந்த த்தைச்சொல்லுகிறே னதைக்கேள், பிறகு கொல்லத்தக்கதானாற் கொல்லு. ஏனென்றால் - சாதி பேதத்தினாலேயே பிராணிகளைக் கொல்லுவதா வதுபூசிப்பதாவது யோக்கியமல்ல. ஆதலா லவ னவ னடத்தையைப்பார்த்து தெதுசெய்யத்தக்க தோ வதுசெய்யவேண்டுமெனக்கழுகிதைக்கேட் டுப் பூனையைப்பார்த்து-ஆனா னீ யேன்வந்தாய் சொல்லெனப் பூனை: நான் கங்காதீரத்தினித்திய ஸ்நானம்பண்ணிச் சாந்திராயண முதலாகியவி ரதங்க ளாசரித்துக்கொண் டிருக்கிறேன். நீமிக வுந் தருமவானா யிருக்கிறாயென் று பக்ஷிகளாலெப் போதுங் கேள்விப்படுகிறதினா னுன்னிடத்திற் குவந்தேன். ஏனென்றால் வயதின்முதிர்ந்த வித் துவானிடத்திற் றருமங் கேட்கவேண்டுமென் று சாஸ்திரமிருக்கிறது. ஆனா னீ தர்மத்தைவிட்டெ

ன்னைக் கொல்லத்துணிந்தாய். இப்படி யில்லறத்தாருடைய வாசார மெங்கும்பார்த்ததில்லை. சத்துருவுந் தம்வீட்டுக்குவந்தாற் சாதுக்களவனுக்குச் சம்மானம்பண்ணுவார்கள். மரந் தன்னை வெட்டுகிறவனுக்கு நிழல் கொடுக்கவில்லையா? மேலுஞ் சாதுக்கடங்கள் வீட்டுக்கெவன்வந்தாலும் பூசிக்கிறார்கள். குறைச்சலொன்றும்பண்ணுகிறதில்லை. இதற்குக்காரண மென்னென்றால்-அதிதியாருடைய வீட்டுக்கு வந்து முகம்வாடிப் போகிறானோ வவன்றன்பாவத்தை யவ்வீட்டெசமானனுக்குக்கொடுத் திவன்புண்ணியத்தைக்கைக்கொண்டு போகிறானாம். ஆகையாற் சாதுக்களெல்லாரிடத்திலுந் தயைசெய்கிறார்கள். சந்திரன் சண்டாளன்வீட்டிலும் பிரகாசிக்கிறதெனஇதைக்கேட்டுக் கழுகு சொல்லுகிறது: பூனை யிறைச்சிகளைத்தின்னுகிறது. மேலுங் கொலைசெய்கிறதென்று நினைத்திப்படி நான்சொன்னேனென - அதைக்கேட்டு நெடுஞ்செவியன் பூமியைத்தொட்டு-ஆசுவாமியென் றுச்சரித்துக் காதின்மேற் கையைவைத்துச்சொல்லுகிறது: நான்றருமசாஸ்திரங்கள்கேட்டு மிகுந்த வைராக்கிய மடைந்து பொல்லாதகருமங்களையெல்லாம் விட்டுவிட்டேன், ஏனென்றால்-அநேகசாஸ்திரங்களிற் கொலைசெய்வதுபோல வேறொருபாதக மில்லையென்றுசொல்லியிருக்கின்றது. ஏனென்றால்-எவர்கண் மற்றொருவனைக்கொன்று தங்களுக்குச் சுகத்தைவிரும்புகிறார்களோ வவர்க ணரகத்தையடைகிறார்கள். ஆகையால்-கொலைசெய்யாமலிருப்பதுபோல வேறொருதருமமில்லையென்று நினைத்துக் காட்டிலிருந்துகொண்டு காய்கனி கிழங்குகளைச் சாப்பிடுகிறவர்களுக்கு ... ப்படிப்பண்

ணுவார்களென்று சொல்லிக் கழுகுக்கு நம்பிக்கைவரப்பண்ணி யதன்வீட்டிலிருந்தது. பிறகந்த ருத்திராக்ஷிப்பூனை பக்ஷிகளின்குஞ்சுகளை நாடோறு மங்கேகொண்டுவந்து தின்றுகொண்டிருக்கத்தலைப்பட்டது. அப்போது குஞ்சிழந்த பறவைகளெல்லாங் கிலேசப்பட்டுப் பிறகெல்லாமொன்றாய்க்கூடித் தங்கள்குஞ்சுகளைச் சோதிக்கத்தொடங்கின. பூனை யிதையறிந் தவ்விடம்விட்டோடிப்போயிற்று. பின்பு-அந்தப்பக்ஷிக ளங்கங்கே பார்த்துக்கொண்டே கழுகின் பொந்தண்டை வந்துபார்க்கையி லந்தக் குஞ்சுகளுடைய வெலும்புகளுஞ் சிறகுகளும் விழுந்துகிடக்கக்கண்டு நம்முடையகுஞ்சுகளை யிந்தத்துரோகிக் கழுகே பக்ஷித்ததென்று நிச்சயித்துப் பிறகந்தக் கழுகைக் கொத்திக்கொன்றன. ஆகையாலொருவனுடைய குணந்தெரியாம லவனுக்கிடங்கொடுக்கலாகாதென - அப்போது-நரிசொல்லுகிறது: உன்சுபாவ மிவனுக்குச் சிநேகிக்கிறதற்குமுன்னேதெரியுமா? ஆகையா னல்லோர்களுக்குச் சுபாவத்தினாலே காரியமில்லையவர்களுடையசிநேகங் கண்டமாத்திரத்திலேயே யாகிறதென மான்-அதைக்கேட் டெப்படிநீயெனக்குமித்திரனோ வப்படியே யிவனுமிருக்கட்டும் நீயொன்றுந்தடைசொல்லாதேயென்று சொல்லி நரியைத் தன்னிடத்தில்வைத்துக்கொண்டது. பிறகு மூன்றுந்தங்கண்மார்க்கத்தின்படி வயிற்றை நிரப்பிக்கொண்டு ராத்திரிக்கந்தவிடத்தில் வந்துகொண்டிருந்தன. இப்படியிருக்கையி லொருநா ணரி மானைப்பார்த்து மித்திரா விந்தக்காட்டி லினவிளைவென்று நேற்றியானபயிரிருக்கிறது. அதையுனக்குக் காண்பிக்கிறேனென் [illegible]

க்கொண்டுபோய்க் காட்டிற்று. அன்றுமுதலா
யந்தமான்போய்த் தினமானம் பயிரை மேய்ந்
துகொண்டிருக்கையி லதைக்கொல்லைக்காரன்பா
ர்த் தங்கேவலைகட்டினான். பின்பு மானங்கேவழ
க்கப்படிமேயப்போயதிற்சிக்கிக்கொண் டிப்போ
தென்னை மித்திரனைத்தவிர யார் விடுவிப்பானெ
ன்று மனதிலெண்ணிக்கொண்டிருக்கையி லங்கே
நரிவந் தென்னுடையமநோரத நிறைவேறிற்றி
ப்போது நானிதனெலும்பையு மாம்சத்தையுநிர
ம்பத் தின்னுவேனென்றுவாயூறமனதிலெண்ணி
க்கொண்டு சும்மாவிருந்தது. அதைக்கண்டு மா
ன்சொல்லுகிறது: மித்திரா வேன் சும்மாவிருக்கி
றா யென்னுடையதலையைச் சீக்கிரமாயறுத் தெ
ன்னை விடுவி. ஏனென்றால்-சங்கடகாலத்திற் சிநே
கிதர்க ளுடையிழந்தவன்கைபோ லுதவுகிறார்க
ளெனச் சம்புகம்: ஆம், நீசொல்வதெல்லா மெய்
யே. ஆனா லெனக்கின்றைக்கு விரததின மாகை
யா னிந்தத்தோல்வலையைத் தீண்டமாட்டே
னுனக் கென்னசொன்னாலுங் கேட்பேன் சிநேகி
தனுக்காக நான்பிராணனை விடத் தக்கவனென்
றுசொல்லி யதன்கண்ணுக்குத் தப்பித்துக்கொ
ண்டங்கே யோரண்டை யொளித்துக்கொண்டி
ருந்தது. பிறகுகாக மிராத்திரிக்கு மான் வரவில்
லையென் றதைத்தேடும்பொருட் டிங்கு மங்குந்
திரிந்துகொண் டங்கேவருகையி லந்தமானினவ
ஸ்தையைப்பார்த்துக் கேட்கிறது: சிநேகிதா-உ
னக்கிந்த வவஸ்தை யிப்படி யேன் வந்ததென,
மான்: இது வுன்வார்த்தையைக் கேளாமையால்
வந்தபலமெனக் காகம்: உன் கூட்டாளியான சம்
புக னெங்கேபோனானென மான்: என்னுடைய வி
றைச்சியைத்தின்கிறதற்காக விங்கேதானேயொ

ளித்துக்கொண்டிருப்பானென - அதைக்கேட்டு க்காகம்: தனக்கிதம்பண்ணுகிற மித்திரன்பேச்சைக்கேளாதவனுக்கு விபத்துச் சீக்கிரமாகவரும். பின்னுமவன் சத்துருவுக்குச் சந்தோஷம் வருவிக்கிறனெனச் சொல்லிக்கொண் டிருக்கையிற் கொல்லைக்காரன் கையி லொருதடியையெடுத்துக்கொண்டுவர வவனைப்பார்த்துக் காகமானுக்குச்சொல்லுகிறது: மித்திரா நீயிப்போது மூச்சையடக்கிக்கொண்டு செத்தவனைப்போலக்கிடந்தா லவ னுன்னைப்பார்த்து நீசெத்தாயென் றெண்ணிக்கொண்டு கட்டியவலையை யவிழ்த்துச்சுருட்டி வேறேரிடத்தில்வைக்கப்போவா னப்போது நான்கத்துகிறே னதைக்கேட்டமாத்திரத்தி னீ மிகவும்விரைவா யோட்டம்பிடியென்றுசொல்லித்தானப்படியே பொய்யாக மானின்கண்ணைக்குத்திக்கொண்டிருந்தது. இதற்குள்ளே வந்தகொல்லைக்காரன் மானைப்பார்த்திது செத்ததென்றெண்ணிக் கட்டியிருந்தவலையை யவிழ்த் தோரிடத்திலொன்றாகக்கூட்டி வைக்கப்போனான். காகமதைப்பார்த்துச் சங்கேதப்படிகத்த மானதைக்கேட்டவுடனே யோட்டம்பிடித்தது. அதைக் கொல்லநினைத்தந்தக் குடியானவன் றடியைவிசிறியெறிய வதுபதிவிருந்தநரிமேற்பட்டிறந்தது. ஆகையால்-புண்ணியமாவது பாவமாவது மிகுதியானால் தன்பலனுடனே யுண்டாகிறதென்று சொல்லிப்பின்னுமெலியிப்படிமானுக்குநரிசிநேகம்போலுன்னுறவுபயோகமன்றெனக் காகம்: உன்னைத்தின்றா லெனக்குப்போதுமா? நீபிழைத்திருந்தா ஞன் சித்திரக்கிரீவனைப்போலச் சுகமடைவேனென் றுன்னட்பை விரும்புகிறேனெனப்பின்னு மிரணியகன்: நீயெனக்குப்பகைவனு

ன்னுடனே நான் சிநேகம்பண்ணுகிறதில்லை. ஏ
னென்றால்-சத்துரு தனக்கனுகூலமாயிருந்தாலு
மவனோடே சிநேகிக்கலாகாது. தண்ணீர் வெந்
நீரானாலு நெருப்பையவிக்கும். ஆகையா லெதுத
க்கதோ வதைச்செய்யவேண்டும். தண்ணீரில் வ
ண்டியும் பூமியின்மேற்கப்பலு நடக்குமா? இதனா
ற் சத்துருக்களிடத்திலும் வியபிசாரியிடத்திலும்
நம்பிக்கை வைக்கலாகாதென் றிப்படிப் பலவித
மாகச்சொல்லக் காகம்; நானுன்னுடனே சிநே
கிப்பே னில்லாவிட்டாற் பட்டினியாகவிருந் திங்
கேயே பிராணனைவிடுவேன். நெருப்பின் வெப்ப
த்தினாற் பொன்முதலானவையுருகி யொன்றாகிற
து. யாதொருநிமித்தத் தினாலே விலங்கு பறவை
கண் மித்திரத்துவத்தை யடைகின்றன. பயத்தி
னாலாகிலும் யாதோராசையினாலாகிலு மூடர்க
ளுக்குச்சிநேகமுண்டாகிறது. ஆனால் சாதுக்களு
டையசிநேகங்கண்டமாத்திரத்தி லுண்டாகிறது.
மண்பானை சீக்கிரயாயுடைகிறது, பிறகுபொருந்
துகிறதில்லை. பொன்குடஞ் சீக்கிரத்திலுடையாது
டைந்தா லொன்றும். இப்படியே துர்ச்சன சற்
சனர்களுடையசிநேகமிருக்கிறதென-இதைக்கே
ட்டிரணியகன் சொல்லுகிறது: உன்வார்த்தை
யா லுன்சந்தோஷமடைந்தே னிப்போ தனக்
குமெனக்குஞ் சிநேகத்துவ மிருக்கட்டு மினிமே
லிருவரு மொருமனதா யிருக்கவேண்டும். உப
காரம்பண்ணுகிறவன் மித்திரனென்று மபகார
ம்பண்ணுகிறவன் சத்துருவென்று மறிந்து மன
க்களங்கமில்லாம னடக்கவேண்டுமென் றிப்படி
ப்பேசிநிச்சயித் திரணியகன்-லகுபதனனுக்குச்
சிறிதாகாரங்கொடுத்துத் தன்வளையிற் போயிற்
று. சிநேகலாபம்பெற்ற காகமு மதனிடத்திற்செ

ஸவுபெற்றுக்கொண்டு தன்னிடத்திற்குப் போயி ற்று. அதுமுதலா யிவைக ளத்தியந்தஞ் சிநேக மா யொன்றுக்கொன் றுகாரங்கொடுத்துக்கொ ண்டு பலபலவார்த்தைகள் பேசிக்கொண்டிருக் கையி லொருநாள்-லகுபதனன்-எலியைப்பார்த் து மித்திரா-இப்போதிங்கே யிரையகப்படாமை யால் வேறேரிடத்துக்குப்போகவிச்சிக்கிறேனெ ன, அதைக்கேட் டிரணியகன் - எங்கேபோகிறு யென, அப்போதது தண்டகாரணியத்திற் கர்ப் பூரகௌரமென்கிற தடாகத்திலிருக்கிற வாமை யாகிய மந்தரனென்பவ னெனக்குச்சிநேகிதனு யிருக்கிறனவனெனக்குவிதம்விதயானமீன்களைக் கொடுத்துப் போஷிப்பா னதைக்குறித்து தா ன வனிடத்துக்குப் போகிறேனெனக்கேட்டு-இரணி யகன்: மித்திரா - அவ்விடத்துக் கென்னையுங் கொண்டுபோகவேண்டு நான்றேசாந்தரம்போ கவிரும்புகிறேனென வப்போது காக்கை நீயப்ப டிவிரும்புவானேனென - இரணியகன் - அங்கே போனபின்பு சொல்லுவேனெனப் பிறகுலகுபத னனிரணியகனை யெடுத்துக்கொண் டந்தவிடத் துக்குப்போயிற்று. அவைகளைப்பார்த்து மந்தர னவ்விரண்டுக்கு மாதித்தியம்பண்ணிற்று. அப் போது லகுபதனன்மந்தரனைப்பார்த் திந்தவிர ணியகன் மிகவும்பரோபகாரி யிவன் சித்திரக்கிரீ வனை யவன்கூட்டத்தோடுகூட வலையினின்றும் விடுவித்தா னப்போதிவனட்பி னிலைமையைப்பா ர்த்து நானுமிவனுடனே நட்புகொண்டேனென- அதைக்கேட்டுக் கூர்மஞ்சந்தோஷிப்பட் டிரணி யகனைப்பார்த்து மித்திரா நீயிந்த மனிதசஞ்சா ரமில்லாக்காட்டில் வருவானேனென-அப்போ தெலிசொல்லுகிறது:

சம்பாவதியென்னும் பட்டணத்திற் சூடாகர்ண னென்னு மொரு சந்நியாசி யுண்டு மிகுந்த சோற்றைக் கப்பரையிற் போட் டுறியின்மேல் வைத்துவிட்டு நித்திரைபண்ணிக்கொண்டிருப்பான். பின் பந்தச்சோற்றைநான்றின்றுகொண்டு சுகமாவிருக்கிறநாளி லங்கே வீணாகர்ண னென்னு மொருசந்நியாசிவந்தவனோடுகூட வநேகக தாப்பிரசங்கம் பண்ணிக்கொண்டிருக்கையி லந்தச் சூடாகர்ணன்கையி லொருதடியினாலே பூமியைத்தட்டிக்கொண்டு சோற்றைக் காப்பாற்றிக் கொண்டிருந்தான். அப்போது வீணாகர்ணனென் னுடைய கதையை யநாதரவுபண்ணி நடுவே வேறேயென்ன வியாபாரத்திலிருக்கிறாயெனச்சூடாகர்ணன்: உன்வார்த்தையை யநாதரவு பண்ணவில்லை. ஆனா லிவ்வெலி யென்பாத்திரத்திலிருக்கிறவன்னத்தை நாடோறுந் தின்னுகிறது—அதை யோட்டுகிறேனென, வீணாகர்ணன்—அப்போது தியைப்பார்த் தவனுக்குச்சொல்லுகிறான்: கொஞ்சபலமுள்ள விந்தவெலி யிவ்வளவுயர மெப்படிக்குதிக்கிறது? ஆகையா லிதற்கேதோவொருகாரண மிருக்கவேண்டும். அதுதா னேதுவாயிருக்கலாமென் றலோசித்துப்பார்த்தால்—மிகவு மிங்கே திரவியமிருக்கும். ஏனென்றால்—உலகத்திற்திரவியமுள்ளவர்கள் பலமுள்ளவர்களா யிருக்கிறார்கள், அசாத்தியமான காரியங்களைச் சாதிக்கிறார்கள், ராசத்துவத்துக்கு மிதுகாரணமாகு மெல்லா மிதனா லாகின்றனவென்று சொல்ல, அந்தச் சந்நியாசியிதைக்கேட்டு மெய்தானென்று நம்பிப்பூமியைவெட்டி யையோ வென் திரவியத்தை யெடுத்துக்கொண்டான். அன்றுதொடங்கி நானிளைத்துப்போனேன். பின்பெனக் கிளையுங் கி

கூடயாததினால் - மெள்ளமெள்ள நடந்துகொண்டிருக்கையிலந்தச்சந்நியாசிபார்த்துப் - பாரிந்தவெலியிப்போதுதன்னுடைய சாதித்தன்மையையடைந்திருக்கிறது. முன்னிருந்த தநமதம் போய்விட்டது. ஆகையால் - பணமில்லாதவர்களையெல்லோரு மற்பமாய் நினைக்கிறார்களென விதைக்கேட்டு நானிப்போதிங்கேயிருக்கிறதுசரியன்றிதை வேறொருவரோடுஞ் சொல்லலாகாது. ஏனென்றால் - பொருளிழவுங் கிரகச்சித்திரமுந் தானமு மானமு மவமானமு மாயுளுந் தனமுமாகிய விவைகளைப்புத்திமான் வெளிப்படுத்தலாகாது. தன்விதி பிரதிகூலமாயிருக்குங் காலத்திற் பராக்கிரமமு முயற்சியும் வீணாகின்றன. ஆகையால்-பணமில்லாதவனுக்கு வனவாசத்தைக்காட்டிலுஞ் சுகமில்லை. எந்தவிடத்தினும்பணக்காரனாயிருந்தோமோ வந்தவிடத்தி லேழையாயிருக்கிறதுத்தமமன்றென்று மறுபடி யிழந்தபணத்தை யெடுத்துக்கொள்ள வாயத்தப்பட்டேனப்போதுசந்நியாசியென்னைத்தடியாலடித்தானதனாலே மிகவுந் துக்கப்பட்டுன்சிநேகிதனோடேகூடவிங்கேவந்தேனென, மந்தரன்; மித்திரா நீயிதனாலதைரியப்பட்டுறைவிடந் துறந்தோமென்று வருத்தப்படவேண்டாம். ஏனென்றால்-சாதுக்களெங்கேபோனாலு மரியாதை பெறுகிறார்கள். சிங்கம் வேறொருகாட்டுக்குப்போனாலும் புல்லைத்தின்கிறதில்லை, யானையையேதின்னும். ஆகையால்-உற்சாகமுள்ளவன் - சந்தோஷமுள்ளவன்-தைரியசாலி-சூரன்-களங்கமில்லாதவனிவர்களிடத்திற் செல்வந் தானேவந்தடையும். நீபணமிழந்தாலு மெப்போதுஞ் சந்தோஷத்தோடேகூடியிருக்கிறாய். ஆகையால்-உனக்கிருக்கிறசுகம்

பணத்தாசையான் மயங்குகிறவர்களுக்கில்லை. இன்னுங்கேள், மேகச்சாயை-துஷ்டனுடையதயை-இளம்புல்-பாலஸ்திரீ-யௌவநம்-தநம்-இவைகள்வெகுநாளைக்கு நில்லாவாகையாலிவை யிழந்துபோனாலழுதுகொண் டாகாரத்தைக்குறித்தேங்கியிருக்கலாகாது. ஏனெனில்-எவன் கர்ப்பத்திலிடுகிறானோ வவன் பிறக்கிறதற்குமுன்னே தானே தாய்முலையிற்பாலையமைத்துவைக்கிறான். அப்படிப்பட்டவ னாயுசுள்ளவரைக்குங் காப்பாற்றமாட்டானா? நீ நல்லவிவேகியாயிருக்கிறபடியி னாலிவையெல்லா முனக்குத்தெரிந்தேயிருக்கும். இனிச்சிநேகமா யென்னிடத்திற் சுகமாயிருவென-இவையெல்லாங்கேட்டுப்பிறகு-லகுபதனன்சொல்லுகிறது: மந்தரா - நீசகலகுணசம்பன்னன், மேலுஞ் சற்சனன், சாதுக்களுக்குவந்த வாபத்தைச் சாதுக்களே நிவிர்த்திபண்ணுகிறார்களென்றறிந்து நாங்களுன்னை நாடிவந்தோமென்று சொல்லி நீண்ட பெரியமரத்தின்மேற்போயுட்கார்ந்துதன்சுபாவப்படியேயிங்குமங்கும் பார்த்துக்கொண்டிருக்கையிலேதோவொரு பயமுகாந்தரத்தையறிந் தவ்விரண்டுக்கு நீங்களுங்களிடத்திலொளித்துக்கொண் டிருங்களென மந்தரன் றண்ணீரிற்போயிற்று, எலி வளையினுழைந்தது. காகம் விருக்ஷத்தினுனியிலிருந்துபார்க்கையிலேதொன்றுங்காணப்படாமையாற் பின்பம்மூன்று மொன்றுக்கொன்று பேசிக்கொண்டிருக்கையி லங்கவைகளின்சமீபத்திற்சித்திராங்கனென்னு மொருகலைமான்வந்து சொல்லுகிறது: நான்வேடர்பயத்தா லுங்களிடத்தி லிருக்கலாமென்று வந்தேனென - அதைக்கேட்டுமந்தர னதற்குச்சம்மானம்பண்ணி யிதுவுன்வீடு, நானுன்சே

வகனென் றெண்ணிக்கொண்டு சுகமாயிருக்கவே ண்டுமென முகமலர்ந்துமனங்கலந்த வின்சொற்சொல்லப் பிறகதுவு மிவைகளுட னட்புக்கொண்டிருந்தது. அப்படியிருக்கையி லொருநாள்சித்திராங்கனென்னு மான் புன்மேயவேறேரிடத்திற்குப்போய் மீண்டு சாயங்காலம் வராமையாலாமை மேயப்போனமா னின்றைக்கேன்சாயந்திரம் வரவில்லையென்றுவிசனப்பட-அதையறிந்தெல்லாம் விசனமடைந்தது. மறுநாள்விடியற்காலத்திற் காக்கைபறந்து நாலுபக்கத்திலும்பார்த்துக்கொண்டுபோகையிற் சித்திராங்கன் றேல்வலையி லகப்பட்டிருக்கிறதைக்கண் டதன்கிட்டே போய்ச் சொல்லுகிறது:மித்திரா-உனக் கிந்தவவஸ்தை யெப்படிநேரிட்டதென மான்: இப்போதிதைக்கேட்டுப் பிரயோசனமில்லை. ஆனனீபோயிரணியகனைச் சீக்கிரமா யிட்டுக்கொண்டுவந்தாலவன் வேடன்வருகிறதற்குள் ளென்பாசத்தையறுத் தென்னை விடுவிப்பான். வேடன் வந்தா லோருபாயமுநடவாதென-இதைக்கேட்டவுடனே விரைவாகப்போ யவைகருடனே நடந்தகாரியத்தைச்சொல்லி யிரணியகனை யிட்டுக்கொண்டுவந்தது. வந்தவிரணியகன் மானைப்பார்த்து நீசமர்த்தனுயிருக்கையில் வலையிலெப்படி யகப்பட்டாயென மான்: வல்லமையிருந்தாலும் வருவதுவரு மிப்போதென்னைச்சீக்கிரமாய்விடுவி, எனக்குப் பழையபயமிருக்கிறது. என்னென்றல்-முன் னுன்குட்டியாயிருக்கையில் வேடன்வலைகட்டி யென்கூட்டத்தை வளைத்தான். ஆனல்-மற்றவைகள் பெரியமான்களாயிருந்தபடியாற் குதித்து வலையைத்தாண்டிப்போயின. எனக்குக்குதித்தோடச் சக்தியில்லாதிருந்த தாதலால் வே

டன்பிடித்து ராசாவினிடத்திற் கொண்டுபோனு
ன். ராசாவாங்கித் தன் பிள்ளைகையிற்கொடுக்க-
அங்கேநான் வெகுநா ளிருந்துகொண் டிருக்
கையி லொருநாண் மேகசர்ச்சனையைக் கேட்டு
நான் மிகவுஞ்சஞ்சலப்பட்டு மனுஷ பாஷையினு
லெனக்குள்ளே பேசிக்கொண்டேன். என்னவெ
ன்றல் - காற்றுமழையாற் பீடிக்கப்பட்டு மான்
கூட்டங்களோடும்போ தவற்றின் பின் னுளுடு
வேனுவென-ராசகுமார னிதைக்கேட்டு நாற்றி
சையும்பார்த் தென்னைப்பார்த்தான். பின்பு சற்
றுநேரஞ் சும்மாவிருந் திதுமனுஷனைப்போ லெ
ப்படி யுச்சரித்தது? ஆகையா லிதுவொரு விசித்
திரப்பிராணியாயிருக்கிறதென் று நினைத்துப் ப
யத்தினுற் சுரத்தில்விழுந்தான். பிறகு விடியற்
காலத்திற் சோதிஷர்களையழைப்பித் தவர்களுட
னே யிதைச்சொல்ல-அவர்கள்-எல்லா மிருகங்க
ளுமனிதரைப்போற்பேசுகின் றனவாமானுணக்
குமுன்னே பேசுகிறதில்லை. அதுவு முன்னைப் பா
ராமற்பேசிற்று. இதற்காக நீ பயப்படவேண்டா
மிது யாதொருவிசித்திரப்பிராணியன் று. இதனு
லுனக் கெவ்வளவும் பயமில்லையென - இதைக்கே
ட்டு ராசகுமாரனென்னைவிட்டுவிட்டான். பிறகி
க்காட்டில்வந்தேன்? இப்படிமூன் றொருதரம்வ
லையிலகப்பட்டேன். ஆகையாலென்னைச் சீக்கிர
மாக விடச்சொல்லுகிறேனென-இதற்குள்ளேமி
த்திரத்துவத்தினுலே மந்தரனு மங்கேவந் திர
ணியகனைப்பார்த்து மித்திரா விப்படித்தாமசம்
பண்ணுகிறதுசரியன் றிப்போது வேடன்வந்தா
னுமெல்லா மோடிப்போவோம். ஆனல் வலையில
கப்பட்ட சித்திராங்கனைப்பிடித்துக்கொள்வா னி
தைக்குறித் தெனக்குக் கிலேசமாயிருக்கிறது. ஆ

னென்றால்-நினைப்பின்படி மனதிலிருக்கிறதைய றிகிற சிநேகிதனும்-மநோகரஸ்திரீயும் பிறர்து க்கமறிகிறபிரபுவுங் கிடைக்கிறதருமையென் றிப் படிமந்தரன் சொல்லிக்கொண்டிருக்கையில்வே ட்ன்சடிதியிற்கள்ளனைப்போற்றூரத்தில்வருகிற தைலகுபதனன்கண் டெலியைப்பார்த்து: மித் திராவேடன்வந்தா னிப்போது பெரிய சங்கட நேரிட்டதென-அதைக்கேட் டிரணியகனதிசீக் கிரமாய்ச் சித்திராங்கன்வலையை யறுத்தது. அ றுத்தவுடனே கிட்டவந்த வேடனைப்பார்த் தெ ல்லாமோட்டம்பிடிக்க வப்போதவன் விசனம டைந்து நாலண்டையும் பார்க்கையின்மந்தரன் றன்னடையின்படி நடந்து கொண்டிருந்தது. வேடனதைப்பார்த்துப் பிடித்துத் தன்வில்லிற் சேர்த்துக் கட்டிக்கொண்டு கொஞ்சஞ்சந்தோ ஷித்தோடே போகும்போ ததைப்பார்த்துமா னுமெலியுங் காகமுமிகவுஞ் சிரமப்பட் டிப்போ தென்னசெய்யலாமென்று வேடன்பின்னேபோ கத்தொடங்கின. அப்போ திரணியகன்: ஒருச ங்கட நிவிர்த்தியாகிறதற்குள்ளே மற்றொன்று வந்து நேரிட்டது. ஆகையால்-சீவனுக்குத் தே கத்தோடேகூட வநேகந்துக்கங்களை யனுபவிக்க வேண்டியிருக்கிறது. இந்தத்துன்பஞ் சிநேகத் தினு னமக்குவந்தது. ஏனென்றால்-எவன் மித்தி ரனிடத்தில் விசுவாசம்வைக்கிறானோ - அந்தவிசு வாசமவனுக்குத்தாய்தந்தைசகோதரன் பிள்ளை சுற்றங்களிடத்திலிராதென் றிப்படிவெகுவிதமா ய்த்துக்கித்துப் பின்னும்வேடன்றூரமாகப்போ வதற்குமுன்னே மந்தரனைவிடத்தக்க வுபாயம்ப ண்ணவேண்டும். பிறகாகமாட்டாதென-அப்போ தவைகள்-என்னசெய்யலாஞ்சொல்லென - எலி:

சித்திராங்கன்-ஏரிகரையிற்செத்தவனைப்போலக் கிடக்கவேண்டும், அதன்மேற் காக முட்கார்ந்துகொண்டு பொய்யாகக்குத்தவேண்டும், அப்படியிருந்தா லதைவேடன்பார்த்து மந்தரனைப்பூமியில்வைத்துவிட்டு மானண்டைபோவா னிதற்குள்ளே நானுமையின்கட்டைச் சேதிப்பேன். பிறகவ்வாமை தண்ணீரி லோடிப்போமெனஇதைக்கேட் டெல்லாமவ்வாறேசெய்து மந்தரனைவிடுவித்தன. பிறகந்தவேடன் வாய்த்தவிடும்போ யடுப்புநெருப்பு மிழந்தவன்போல வெட்கி மிகவும்வருத்தமடைந்து கைக்குவராத பெரியலாபத்தையிச்சித்துக் கைக்குவந்த சிறியலாபத்தை யிழந்தேனே. யார்க்குமதிகவாசை யதிகநஷ்டம். கிடைத்தமட்டும் போதுமென்று நினைக்கிறவனே மகாபுருஷனென் றிங்ஙனமெண்ணிக்கொண்டு தன்வீட்டுக்குப் போனவுடனே - அந்தக்காகமுமாமையு மானு மெலியு மிகவுஞ்சந்தோஷமடைந்து தங்களிடத்தின் முன்போல வாழ்ந்திருந்தன.

இரண்டாவது சுகிர்ல்லாபதந்திரம்-அல்லது நட்புப்பேறு முற்றிற்று.



# மூன்றுவது

# சந்திவிக்கிரகம

## அல்லது-அடுத்துக்கெடுத்தல்.



முன்னே பகையாளிகளாயிருந்தவர்களுடைய விசுவாசத்தி னமபிக்கை வைக்கலாகாது. நமபினெல்படிக்காகங் கோட்டான்களின் குகையைக்கொளுத்தி நாசமபண்ணினதோ வப்படிநேரி

டுமெனவதைககேட டிராசகுமாரர்களதெபபடி
சசொலலுமெனசசோமசனமா சொலலுகிறன:
தெனறேயததின மயிலைநகரததின சமீபதது
லொருபெரியவாலமரததினமேகவர்ணனென னு
ங் காகராசனறனகூடடஙகளோடு கூடவிருககை
யிலஙகே-உருமர்ததனனென னுமிராசகோடடா
ன கூட்டததோடு மலைககுகையிலிருநதுவநதால
மரததைவளைததுககொண டிராததிரியிலகபபட
டகாககததையெலலாஙகொனறுவிடடு நாடோறு
ம்போயககொணடிருநதது. அதனலவவிடததை
விடடுவிடுமபடி காககைகடகு நேரிடடதனன்
மேகவர்ணனறனமநதிரிகளை யழைததுநம்பகை
வர்நாடோறுமிஙகு ராமாறுவநதுகாககைகளைக
கொலலுகிறர்கணயககாஞ லிரவிற்கணடெரிகிற
திலலை. மேலுமவர்களிருபபிடமுமறியோமறிந்தா
லஙகேபோ யவர்களைககொலலலாம். பகைவரை
யசடடைபணணினலது நோயபோற் பெருகிப
பொலலாஙகு விளைககுமாதலா லிபபோழது ச
நதிவிககிரகம-பேதம - கலகமெனுமிவறறுட்டக
கதிதுவெனறு சொலவீர்க ளென-இதைக கேட
டு மநதிரிகள: அரசனகேடபதற்கு முனனேதா
னேபிரதானிக ளிதனு சொலலவேண்டுமில்லாவி
டிற்கேடடபிறகாயினுமவிளைவாயச்சொல்லவே
ண்டும. அபபடிசசெயயாமற்சுமமாவிசசகம்பேசு
கிறவனை யரசனுககுசசததுருவெனறு நினைகக
வேணடுமெனறிவ்வாறுசொலலிபபினபுமநதிரிக
ளை நதுமெனனசெயவோமென றெனறுககொன
றுலோசிககததொடஙகின. அபபோதவைகளிலு
ததமசிவியெனபது - அரசனை நோககிமகாராசா
வே வலியவர்களுடனேபகைபணணலாகாது, ச
மாதானமேதகுநதது தேனெனில் -பகைவர்களை

